



SWAMI VIVEKANANDA'S

# SONG OF THE SANYASIN

'சந்நியாசி கீதம்' - தமிழாக்கம்

பண்டிதர்.ம.கோபாலகிருஷ்ணய்யர்



## பொன்மொழிகள்
## பக்திப்பாடல்கள்

வெளியீடு

நூற்றாண்டு விழாக்குழு

ஸ்ரீ ராமகிருஷ்ணா

தொடக்கப்பள்ளி

சிவகங்கை–630561




குருதேவர் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் சீடர் நரேந்திரர்
தமது திருமேனி தீண்டுதலால் இறைஅனுபவம் பெறுதல்.
அன்னை பவதாரிணியிடம் ஆன்மீக ஞானம் பக்தி மட்டும் கோருதல்.





# SWAMI VIVEKANANDA'S

# SONG OF THE SANYASIN

'சந்நியாசி கீதம்' - தமிழாக்கம்

பண்டிதர். ம.கோபாலகிருஷ்ணய்யர்



## பொன்மொழிகள்
## பக்திப்பாடல்கள்




வெளியீடு

நூற்றாண்டு விழாக்குழு

ஸ்ரீ ராமகிருஷ்ணா

தொடக்கப்பள்ளி

சிவகங்கை-630561

## பொருளடக்கம்



**சிவகங்கை ஸ்ரீராமகிருஷ்ணா தொடக்கப்பள்ளி**
**நூற்றாண்டு விழா (1922 - 2022)**
**நூற்றாண்டு விழாக்குழுவின் இலவச வெளியீடு**

(பள்ளி மாணவர்கள், ஆசிரியர்கள், நன்கொடையாளர்கள், ஆன்மீக அன்பர்களுக்கு மட்டும் வழங்கப்பெறும்)

அச்சுப் பதிப்பு : சஞ்சய் அச்சகம், மதுரை.

அச்சக உரிமையாளர் : தேசபக்தர் உயர்திரு.சஞ்சய் கணபதி
முன்னாள் சிவகங்கை நகர் மன்ற உறுப்பினர்

வெளியீட்டின் நோக்கம் : 'நாட்டுப்பற்று' அரியணையில் ஆன்மீகம் கொலுவிருத்தல்.

**இந்நூல் விற்பனைக்கல்ல.** **தனிச்சுற்றுக்கு மட்டும்**

## நூற்றாண்டு விழா ஆலோசனைக்குழு

உயர்திரு. **R.வேங்கடகிருஷ்ணன்,** பள்ளியின் தாளாளர் – தலைவர்

உயர்திரு. **S.ஸ்ரீநிவாசராகவன்,** பள்ளியின் துணைத்தலைவர் – வழக்கறிஞர்

உயர்திரு. **A.அனந்தராமன்,** பள்ளிச்செயலர், IOB மேலாளர், (ஓய்வு)

உயர்திரு. **V.குருராமகிருஷ்ணன்,** முன்னாள் மாணவர், ஆடிட்டர், மதுரை.

உயர்திரு. அரிமா. பொறியாளர் **T.N.பாரதிதாசன் Best Engineers,** சிவகங்கை.

உயர்திரு. அரிமா.**கோட்டைமுத்து** என்ற **V.S.V.K.திரவியம்**
(ரமணா அசோசியேட்ஸ்) வரிகள் ஆலோசகர், சிவகங்கை.

உயர்திரு. **R.சங்கரன்** தலைவர் சுவாமி விவேகானந்தா பள்ளிகள், சிவகங்கை.

## நூற்றாண்டு விழா – செயற்குழு
### (பள்ளியின் முன்னாள் மாணவர்கள்)

உயர்திரு. **C.கொங்கேஸ்வரன்** தொழிலதிபர். சிவகங்கை – தலைவர்

உயர்திரு. **S.உதயசங்கர்**
வளர்ச்சித்துறை உயர் அலுவலர் (பணி நிறைவு) சிவகங்கை – செயலர்

திருமதி. **V.பத்மாவதி** நிறுவனர் தடாகம் கற்றல் மையம், மதுரை – உறுப்பினர்

உயர்திரு. **S.V.ஜிதேந்திரன்**
மூத்த சார்ட்டர்டு அக்கவுண்டன்ட், சென்னை, உறுப்பினர்

உயர்திரு. **S.சந்திரசேகரன்** ஆசிரியர் (பணிநிறைவு) ஹைதராபாத் – உறுப்பினர்

உயர்திரு. **M.சத்யநாராயணன்** LIC Housing Finance Ltd.,Madurai - உறுப்பினர்

செல்வி. **V.மீரா** கிளை மேலாளர் (பணி நிறைவு)
பஞ்சாப் நேஷனல் வங்கி (இருப்பு)–தஞ்சாவூர் – உறுப்பினர்,

உயர்திரு. **R.கிரி** LIC சிவகங்கை, உறுப்பினர்

உயர்திரு. **K.ஸ்ரீநிவாசன்** ஆசிரியர், சிவகங்கை – உறுப்பினர்

திருமதி. **R.விஜயாள்** தலைமை ஆசிரியை
ஸ்ரீராமகிருஷ்ணா தொடக்கப்பள்ளி, சிவகங்கை, இணைச்செயலர்

திருமதி. **P.சொர்ணவள்ளி** ஆசிரியை,
ஸ்ரீராமகிருஷ்ணா தொடக்கப்பள்ளி சிவகங்கை – பொருளாளர்

### சிறப்பு அழைப்பாளர்கள்

உயர்திரு. **PL.பெரியசாமி** இன்ஸ்பெக்டர், காவல்துறை (Rtd), சிவகங்கை.

உயர்திரு. அரிமா.**ஆர்.ராதா**
உரிமையாளர், ஸ்ரீவெங்கடேஸ்வரா ஸ்வீட்ஸ், சிவகங்கை.

## நூற்றாண்டு விழாக்குழு
## ஸ்ரீ ராமகிருஷ்ணா தொடக்கப்பள்ளி, சிவகங்கை

### அறிமுக உரை


S.உதயசங்கர்

அன்புள்ள

ஆன்மீக சகோதரிகளே, சகோதரர்களே,

வணக்கம்,

ஸ்ரீ ராமகிருஷ்ணா பள்ளியின் நூற்றாண்டு விழாவை முன்னிட்டு பள்ளியின் பெருமை, தரம் மேலும் செழிப்புற பள்ளியின் தாளாளர் திரு. ஆர். வேங்கடகிருஷ்ணன் அவர்கள் ஓர் ஆன்மீகத் திட்டம் வகுத்ததோடு அதற்குச் செயல் வடிவம் தாமே ஏற்பாடு செய்துள்ளார். அஃது ஓர் ஆன்மீக நூல் வெளியீடு.

ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர் நானும் இப்பள்ளியில் படித்தபோது அமரர் J.ரெங்கசாமி அய்யர், நிர்வாகத் தலைவர் மற்றும் தாளாளர். அமரர். R.ஸ்ரீநிவாச அய்யங்கார், தலைமை ஆசிரியர். அனைத்து ஆசிரியப் பெருமக்களும் சிறந்த பண்பாளர்கள், ஆன்மீக ஈடுபாடு கொண்டவர்கள். பெற்றோர்களும் தமது குழந்தைகளின் ஏட்டுக்கல்வியிலும், ஒழுக்க மேம்பாட்டிலும் பள்ளியோடு ஒத்துழைத்தனர்.

குருதேவர் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர், அன்னை ஸ்ரீ சாராதாமணிதேவி, ஸ்ரீசுவாமி விவேகானந்தர் ஜயந்தி விழாக்கள் கொண்டாடும் போது, பூஜைகள் முடிந்தவுடன் ஆன்மீக வழிபாட்டு நூல்கள் வாசிப்பும் ஒப்பித்தலும் நடைபெறும். பழைய காலத்தில் மாணவர்களுக்கு ஆன்மீகப் பயிற்சி அளித்தது போல் என்றென்றும் அத்தகைய பயிற்சி பள்ளியில் அளிக்கப்பெற வேண்டும் என்றும் தலைவர் விரும்புகிறார்.

ஆன்மீகச் சான்றோர்களின், குறிப்பாக சுவாமி விவேகானந்தரின், கட்டுரைகள், கவிதைகள், பொன் மொழிகள் தொகுக்கப்பெற்று ஒரு சிறு நூல் வெளியிடப்பெற்றுள்ளது. இதற்கான செலவுகளுக்குத் தாமே ஏற்பாடு செய்வதாகவும்

தலைவர் தெரிவித்துள்ளார். பள்ளி மாணவச் செல்வங்களே, தேசிய கவி பாரதியார் தமது அமுதக் கவிதைகளில் கூறியபடி:

***"பாரத நாடு பழம்பெரு நாடு; நீரதன் புதல்வர்,
இந்நினைவகற்றாதீர்!***

***பாரத தேசம் பார்க்கெல்லாம் திலகம்; நீரதன் புதல்வர்,
இந்நினைவகற்றாதீர்!"***

சிறந்த ஆன்மீகச் செல்வர்களாகவும், நாட்டுப்பற்றுள்ள குடிமக்களாகவும் திகழப் பள்ளி அளிக்கும் ஒரு பயிற்சியே இந்தத் திட்டம். இந்நூல் வெளியிடப்பெறும் பொறுப்பை நூற்றாண்டு விழாக்குழு ஏற்கும்.

இத்திட்டம் சிறந்த வெற்றி பெறப் பள்ளி ஆசிரியர்கள், பெற்றோர்கள் மற்றும் ஆன்மீக அன்பர்கள், கல்வித்துறை அலுவலர்கள் ஒத்துழைப்பு அளிக்குமாறு கோருகிறேன்.

**S.உதயசங்கர்**
செயலர்
நூற்றாண்டு விழாக்குழு




**J.R. MEMORIAL**
**கட்டடத்தில் உள்ள அலுவலகத்தில்**
**தலைமை ஆசிரியை - நல்லாசிரியர்**
**திருமதி R.விஜயாள் அவர்கள்**

## பதிப்புரை

### திரு. R.வேங்கடகிருஷ்ணன், தாளாளர், - தலைவர் ஸ்ரீ ராமகிருஷ்ணா தொடக்கப்பள்ளி, சிவகங்கை



எனது தந்தையார் அமரர் **J.ரெங்கசாமி அய்யர்** சிவகங்கை மன்னர் பள்ளி ஆசிரியர். 1935 முதல் 1951 எப்ரல் முடிய மன்னர் தொடக்கப்பள்ளியின் தலைமையாசிரியர். 11.09.1911 அன்று நிறுவப்பெற்ற சிவகங்கை **ஸ்ரீ ராமகிருஷ்ண விவேகானந்த வேதாந்த சங்கம்,** 1922 விஜயதசமியன்று நிறுவப்பெற்ற **ஸ்ரீராமகிருஷ்ணா வித்யாசாலை** ஆகிய இரண்டு நிறுவனங்களிலும் 14.01.1914 நாளிலிருந்து செயல் உறுப்பினராகவும், 1950 ஜனவரி முதல் 11.03.1986 முடிய இரு நிறுவனங்களின் தலைவராகவும் தொண்டாற்றினார். இக்காலத்தில் சங்கமும் பள்ளியும் பெரும் வளர்ச்சி பெற்றன.

இயற்கையிலேயே ஆன்மீக ஈடுபாடும் சர்வ சமய நல்லிணக்கமும் கொண்டவராக இருந்த **ஜே.ஆர்.** தமது ஆண், பெண் குழந்தைகளுக்கும், தமது மாணவச் செல்வங்களுக்கும், ஆன்மீக ஈடுபாடு காட்டும் அன்பர்களுக்கும் சர்வ சமய ஆன்மீக நூல்களைப் பயிற்றுவித்து ஆன்மீகப் பணியாற்றினார்.

**ஜே.ஆர்.** ஆற்றிய ஆன்மீகப் பணியை ஓரளவாவது ஆற்ற விருப்பம் மேற்கொண்டு, குறிப்பாக ஸ்ரீ ராமகிருஷ்ணா பள்ளியின் மாணவச் செல்வங்கள், ஆசிரியைகள் இந்நூலைப் படிப்பதோடு முறையான பயிற்சியும் பெற முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும் என்பது எனது விருப்பம்.

**சுவாமி விவேகானந்தர்** சிகாகோவில் நடைபெற்ற சர்வ சமய மாநாட்டில் ஆற்றிய ஆங்கில உரை, இராமநாதபுரம் **மன்னர் பாஸ்கர சேதுபதி** பற்றிய செய்திகள், **பண்டித ம.கோபாலகிருஷ்ணய்யர்** ஆங்கிலக் கவிதைகளின் தமிழாக்கம்,

**ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர், ராமகிருஷ்ண இயக்கம், கவியோகி மஹரிஷி சுத்தானந்த பாரதியார்** மற்றும் விடுதலைப்போராட்டம் பற்றிய ஆராய்ச்சியாளரும் பிரபல எழுத்தாளருமான பெரியவர் உயர்திரு.**பெ.சு.மணி** அவர்களின் கட்டுரை, **ம.கோ.**அவர்களின் பெயர்த்தி டாக்டர் **உஷா மஹாதேவன்** பெரும் முயற்சி மேற்கொண்டு வெளியிட்ட **"ம.கோ.களஞ்சியம்"** நூல் பற்றிய கட்டுரை, "Song of the Sanyasin" கவிதைகள், **ம.கோ.வின் தமிழாக்கம்** மற்றும் பல **ஆன்மீகப் பாடல்கள், பொன்மொழிகள்** இந்நூலில் தொகுக்கப்பெற்றுள்ளன.

**மதுரை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின்** தலைவரும், ஆன்மீகச் செயல்திட்டங்களை முறையாகச் செயல்படுத்தி ஆன்மீக மற்றும் இலக்கியப் பணிகள் ஆற்றிச் சிறப்புப் பெற்றுள்ள வணக்கத்திற்குரிய **சுவாமி கமலாத்மானந்தர்** அவர்களின் ஆசிச் செய்தி உற்சாகம் அளித்துள்ளது. அனைத்து ஆன்மீக அன்பர்களுக்கும் நன்றி கலந்த வணக்கம்.

இந்த நூல் வெளியிட எனது இனிய குடும்ப நண்பரும், தலைமை ஆசிரியப்பணியில் என்னோடு இணைந்து பணியாற்றியவருமான அமரர் **ராஜாசிங் டேவிட்** அவர்களின் புதல்விகள், புதல்வர் **பிரின்ஸ்,** எங்கள் குடும்ப நண்பர் கல்வித்துறை அன்பர் கண்காணிப்பாளர் அமரர் **அ.ஆறுமுகம்** அவர்களின் துணைவியார் திருமதி. **வயோலா கிரேஸ்** மற்றும் புதல்வர் திரு. **A.J.ரவி,** அமரர் ஹாஜி **A.M.M.ரபீக்** அவர்களின் புதல்வர் ஜனாப் **சையது இப்ராஹிம்**, சுபாதேவி, பள்ளி உடற்கல்வி ஆசிரியர் பணிநிறைவு திரு.**பா.பகலவன்** மற்றும் நண்பர்கள் தாமாக உவந்தளித்த தொகையைக் கொண்டு இந்த நூல் வெளியிடப்பெறுவதற்கான அச்சகச் செலவுகளுக்கு பயன்படுத்தப்பெற்றன.

கவியோகி சுத்தானந்த பாரதியாரின் உயர்ந்த கொள்கையான "மானிடர் ஓரின மக்களே ஆவர். சாதி, மதமெனும் பேதமேயின்றித் தீதற வாழும் செவ்விய மந்திரம், இன்பமே சூழ்க! எல்லோரும் வாழ்க!

இப்பணியில் அடியேன் ஈடுபட உற்சாகம் அளித்து அருளாசி பொழிந்த குருதேவர் சுவாமி விவேகானந்தர், எனது தந்தையாரின் திருப்பாதங்களை வணங்குகிறேன்.

"**ஆன்மீக உள்ளமே இறைவனின் இருப்பிடம்**"

## மாணவர் பார்வையில் பேராசிரியர் ம.கோ.



சிவகங்கையில் ஸ்ரீராமகிருஷ்ண விவேகானந்த வேதாந்த சங்கத்தின் தலைவராகவும் ஸ்ரீராமகிருஷ்ணா தொடக்கப் பள்ளியின் தாளாளராகவும் தலைவராகவும் பணியாற்றிய ஆசிரியர் திலகம் திரு. **J.ரெங்கசாமி அய்யர்,** மதுரைக் கல்லூரியில் 1908 - 1910ஆம் ஆண்டுகளில் அவர் மாணவனாக இருந்த நாட்களை நினைவு கூறுகிறார்.

"நான் நேடிவ் காலேஜில் (இன்றைய மதுரைக் கல்லூரி) எஃப்ஏ. (F.A.) படித்துக் கொண்டிருந்தேன். **ஸ்ரீ.ம.கோபாலகிருஷ்ணய்யர்** காலேஜ் தமிழ் ஆசிரியர்; மதுரைத் தமிழ்ச் சங்கத்திலும் ஒரு முக்கிய பிரமுகர். பாண்டித்துரைத் தேவர், மன்னர் பாஸ்கர சேதுபதி, கஜானா சம்போ சங்கர்ராவ் (மராட்டிய பிரமுகர்) போன்றோரின் நெருங்கிய நண்பர்.

தமிழ்ச் சங்கத்தில் ஒரு கட்டுரைப் போட்டி அறிவிக்கப் பெற்றது. நான் ஸமஸ்கிருத மாணவன். எனவே போட்டியில் பங்கேற்கலாமா என்று ஆசிரியரிடம் கேட்டேன். தமிழ் ஆர்வம் உள்ள மாணவர்கள் எவரும் போட்டியில் பங்கேற்கலாம் என்றார். போட்டி நடந்தது. என்னுடைய கட்டுரை முதல் பரிசு பெறத் தேர்வு செய்யப்பெற்றிருந்தது. தமிழ் கற்கும் மாணவர் முதல் பரிசு பெறலாம் என்ற எண்ணத்தில் அந்த மாணவனுக்குப் பயன் தரத்தக்க தமிழ் இலக்கண நூல்களை முதல் பரிசுக்காக ஆசிரியர் ஏற்பாடு செய்திருந்தார்.

என்னைக் கூப்பிட்டனுப்பினார். "இரண்டாவது பரிசு பெறும் மாணவன் தமிழ் கற்பவன். நீ ஸமஸ்கிருதம் கற்கும் மாணவன். முதல் பரிசுக்கான நூல்களை அவனுக்குப் பரிசாக அளித்தால் அவனுக்குப் பயன்படும்" என்றார். சமஸ்கிருதம்

பயிலும் என்னைவிட தமிழ் பயிலும் மாணவனுக்கே அதனால் அதிகப் பயன் என்றே நானும் கருதினேன். ஆனால் முதலிடம் பெற்ற எனக்கு இரண்டாவது பரிசுக்கு வாங்கிய நூலை மட்டும் தருவதற்கு அய்யரின் மனம் ஒப்பவில்லை. அவர் என்னிடம் இரண்டாவது பரிசுக்குரிய ‘நைடதம்’ அதிவீரராம பாண்டியன் இயற்றியது. உனக்குத் தருகிறேன். அத்துடன் நீ விரும்பும் மற்றுமொரு நூலையும் வழங்க ஏற்பாடு செய்கிறேன். உனக்கு எந்த நூல் தேவை என்றார். “ஷேக்ஸ்பியர் இயற்றிய நாடகங்களடங்கிய Globe Edition கிடைத்தால் மகிழ்ச்சி“ என்றேன். அவர் சிரித்துக்கொண்டே “போட்டியோ தமிழில்; முதல் பரிசு பெறுவதோ சமஸ்கிருத மாணவன்; அவன் விரும்பிக் கேட்பதோ ஆங்கில இலக்கியம். என்ன விந்தை!‘ என்று கூறிவிட்டு நான் கோரியபடியே எனக்கு ‘நைடதம்’ மற்றும் ஷேக்ஸ்பியர் நாடகங்கள் பரிசளிக்க (முதல் பரிசாகத்தான்) ஏற்பாடு செய்தார்.

அய்யர் கம்பீரமான தோற்றம் கொண்டவர். கணீரென்ற குரல். சுவாமி விவேகானந்தர் அமெரிக்காவிலிருந்து இலங்கை வழியாக இந்தியா திரும்பியபோது சேதுபதி மன்னருடன் வரவேற்பு நிகழ்ச்சியில் பங்கேற்ற பெருமை பெற்றவர். சுவாமிஜியின் (Song of the Sanyasin) பாடல்களை தமிழில் மொழி பெயர்த்ததோடு அவற்றை அவரே பாடும்போது கேட்டு மகிழ்ந்த நான், அப்பாடல்கள் அனைத்தையும் மனப்பாடம் பெற்றேன். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு எனக்குத் தமிழில் ஆர்வம் அதிகரித்தது. என் தமிழ் ஆர்வத்தை ஊக்குவித்தவர் ம.கோ. அவர்களே.

அவர் இயற்றிய ஸந்யாசி கீதத்தைப் போற்றவேண்டும். எனவேதான் சுவாமி விவேகானந்தர் ஜெயந்தி அன்று சுவாமிஜி இயற்றிய ஆங்கில 'The Song of the Sanyasin' பாடல்களுடன் ஸந்யாசி கீதம் மொழி பெயர்ப்புப் பாடல்களையும் என் பள்ளியில் படிக்கப்பெற ஏற்பாடு செய்துள்ளேன்.

J.ரெங்கசாமி அய்யர்

தலைமை ஆசிரியர் (ஓய்வு)

**Sri Ramakrishna Math**
**Reserve Line, Madurai-625014. Tamilnadu**
0452-2680224 email : madurairkm@gmail.com

## ஸ்ரீ ராமகிருஷ்ண சரணம்

ஸ்ரீ ஆர்.வேங்கட கிருஷ்ணன், தலைவர் - தாளாளர்
ஸ்ரீ ராமகிருஷ்ணா தொடக்கப்பள்ளி, சிவகங்கை - 630 561.



## வாழ்த்துரை

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் திருவருளைப் பெற்ற அன்பார்ந்த ஸ்ரீ வேங்கடகிருஷ்ணன் அவர்களுக்கு, ஸ்ரீ மீனாட்சி - சுந்தரேஸ்வரர்களின் கிருபையை முன்னிட்டு எழுதுவது.

அன்பார்ந்த நல்வாழ்த்துக்கள்.

சுவாமி விவேகானந்தர் மானாமதுரையில் 1897 பிப்ரவரி முதல் தேதி சொற்பொழிவு செய்தார். அன்றைய தினமே சுவாமி விவேகானந்தருக்கும் சிவகங்கைக்கும் தொடர்பு ஏற்பட்டு விட்டது.

மதுரையில் இப்போது ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் பல்வேறு ஆன்மீகப் பணிகளையும், சமூகநலப் பணிகளையும் தொடர்ந்து செய்து கொண்டிருக்கிறது. மதுரை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்துடன் தொடர்புடைய பக்தர்கள் இப்போது மதுரையில் நிறைய பேர் இருக்கிறார்கள். இதுபோன்று ஸ்ரீ ராமகிருஷ்ண இயக்கம் மதுரையில் வளர்ந்து செழிப்பதற்கும் முன்பே, மதுரையில் ஸ்ரீ ராமகிருஷ்ண இயக்கம் தொடர்புடைய இரண்டு பெரியவர்கள் வாழ்ந்தார்கள்.

ம. ஜகதீஷ் ஐயர், அவருடைய தம்பி **ம. கோபாலகிருஷ்ண ஐயர்** ஆகிய இருவரும்தான் அந்தப் பெரியவர்கள். சுவாமி விவேகானந்தர் 1897 ஜனவரி 26-ஆம் நாள். இலங்கையிலிருந்து கப்பலில் பாம்பனுக்கு வந்தார். அப்போது அங்கு அவரை இராமநாதபுர அரசர் **பாஸ்கர சேதுபதி**யுடன் சேர்ந்து **ம.கோ.**வும் வரவேற்றார்.

**ம. ஜகதீஷ் ஐயரும், ம.கோ.வும்** மதுரையில் 4.7.1906 அன்று **சுவாமி ராமகிருஷ்ணானந்தரையும்**, **சுவாமி அபேதானந்தரையும்**

வரவேற்று அவர்களின் நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடுகள் செய்தவர்கள். மேலும் அந்நாளில் அவர்கள் ஸ்ரீ ராமகிருஷ்ண இயக்கம் சார்ந்த பணிகளில் தங்களை இணைத்துக் கொண்டவர்கள். இவர்களில் **ம.கோ** எனப்படும் **ம.கோபாலகிருஷ்ண ஐயர்** மதுரையில் மிகப் பெரும் தமிழறிஞராக விளங்கினார். அவர் தமிழறிஞராக மட்டுமின்றி, சம்ஸ்கிருத்திலும் ஆங்கிலத்திலும் பெரும் புலமை உடையவர். அவர் மதுரையில் '**விவேகானந்த சபை**' என்ற அமைப்பை நிறுவி, அதன் செயலாளராகவும் இருந்தார்,

ஆங்கிலத்தில் சுவாமி விவேகானந்தர் எழுதிய "The Song of the Sanyasin" என்பதை '**சந்நியாசி கீதம்**' என்று தமிழில் மொழிபெயர்த்து 1904-ஆம் ஆண்டு 'விவேகானந்த சபை' யின் வெளியீடாக வெளியிட்டவர் அவர்.

சிவகங்கை ஸ்ரீ ராமகிருஷ்ண வித்யாசாலையின் தாளாளராகப் பணியாற்றியவர் ஜே.ரெங்கசாமி அய்யர், அவர் " The Song of the Sanyasin - **சந்நியாசி கீதம்**" பாடல்களை பள்ளி மாணவ - மாணவிகள் ஒப்பிப்பதற்குப் பயிற்சி கொடுத்தார், மேலும் அவர் அந்நாளில் அந்தப் பாடல்களை விவேகானந்தர் ஜயந்தி விழாவிலும் பாடியவர்.

இப்போது அதே வழியில் அவருடைய மகனாகிய நீங்கள் " **The Song of the Sanyasin - சந்நியாசி கீதம்**" பாடல்களை இலவசமாக அச்சிட்டு பொதுமக்கள், மாணவ-மாணவிகள் ஆகியோருக்கு வழங்க இருக்கிறீர்கள். இது மிகவும் மகிழ்ச்சிக்குரிய ஒரு செய்தி; புண்ணியம் தரவல்ல ஒரு பணி.

இது போன்ற ஆன்மீகப் பணிகள் செய்யும் நீங்கள் வாழ்க. வளர்க, வெல்க!

ஆர்.வேங்கடகிருஷ்ணன் அவர்களின் ஆன்மிகப் பணிகள்-சமூகநலப் பணிகள் மேன்மேலும் சிறந்து விளங்க மதுரையில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மீனாட்சி-சுந்தரேஸ்வரர்களின் பெயராலும், பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், அன்னை ஸ்ரீ சாரதாதேவியார், சுவாமி விவேகானந்தர் பெயராலும் வாழ்த்துகிறேன். அன்பு ஏற்றுக்கொள்ளுங்கள். வணக்கம்.

இறைவன் தொண்டில்
தங்களன்புள்ள,
**சுவாமி கமலாத்மானந்தர்**, தலைவர்.



## சிவகங்கையும் ஸ்ரீ ராமகிருஷ்ண இயக்கமும்

ஆராய்ச்சியாளர் & எழுத்தாளர்
திரு.பெ.சு.மணி

ஸ்ரீ ராமகிருஷ்ண விவேகானந்த வேதாந்த சங்கம், ஸ்ரீ ராமகிருஷ்ணா பள்ளி, பள்ளி மற்றும் சங்கத்தின் இன்றைய தலைவர் பள்ளியின் நூற்றாண்டு விழா மூன்றும் ஒன்றுக்கொன்று **கவியோகி சுத்தானந்த பாரதி**யை மையப் புள்ளியாகக் கொண்டவை.

தமிழக இராமகிருஷ்ண இயக்க வரலாற்றில், சிவகங்கை ஸ்ரீ ராமகிருஷ்ண விவேகானந்த வேதாந்த சங்கத்திற்கு போற்றத்தக்க சிறப்பிடம் உண்டு. இந்த சங்கத்தைப் பற்றி **கவியோகி சுத்தானந்த பாரதியார்** அவர்கள் (1897-1990) எனக்கு 28.01.1985ல் எழுதிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளனர்.

“சிவகங்கை இராமகிருஷ்ண மடம் எனது தவ நிலையமாயிருந்தது (1911-1914). அங்கே உபநிஷத் பாராயணம் காலை, மாலை முறையாக இராமகிருஷ்ண, விவேகானந்த உபதேசங்கள் படிப்பது, நான் விளக்குவது, பஜனை (தீபம் பிரதட்சிணம்) நடந்தன. தீபாவளி தோறும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் - விவேகானந்தர் திருவாக்குகளைத் தமிழாக்கி வெளியிட்டு ஊரெங்கும் பரப்பினோம். பிறகு ராமகிருஷ்ண வித்தியாலயம் நடத்தினோம். அது இன்று வரை நடக்கிறது.”

எனக்கு கவியோகியின் அறிமுகமும், நட்பும் அவர் சென்னை அடையாற்றில் யோக சமாஜம் நிறுவிய காலத்தில்

இருந்தே வளர்ந்தோங்கியது. **சிலம்புச் செல்வர் ம.பொ.சி.** அவர்கள் தமது செங்கோல் வார இதழில் **இராமலிங்க சுவாமிகள்** வரலாறு குறித்து தொடர் கட்டுரைகள் எழுதி வந்த காலத்தில், **அருட்பிரகாச வள்ளலார்** குறித்து **கவியோகியிடமிருந்து** வேண்டப்பெற்ற சில செய்திகளைக் கேட்டறிய என்னைப் பணித்துள்ளார். ம.பொ.சி. அவர்கள் கவியோகியை மிகவும் போற்றி மதித்தவர்.

தமிழ் இலக்கியத்தில் குருதேவர் ஸ்ரீ ராமகிருஷ்ணர் எனும் ஆய்வு நூலை எழுதுவதற்கு நான் மேற்கொண்ட தேடலில் கவியோகியின் இரு படைப்புகள் நற்பேறு காரணமாக எனக்குக் கிடைத்தன. "**ராமகிருஷ்ணாம்ருதம்**" "**ஸ்ரீ பரமஹம்ஸ லிலை**" இவை 1925-ல் வெளிவந்தவை. இந்த அரிய இலக்கியப் புதையலைப் பற்றி அவர் நூல்களின் நூற்பட்டியலில், பிற ஆய்வாளர்கள் குறிப்புகளில் எவ்விதச் செய்தியும் இடம் பெறவில்லை. முதன்முதலாக நான், இராமகிருஷ்ண இலக்கிய வரலாற்றில், வரலாற்றுப் புகழ் கொண்ட **கவியோகி**யின் சிறந்த ஆவணங்களாகத் திகழ்ந்தவை குறித்து ஆய்வு செய்தேன்.

"**கவியோகி சுத்தானந்த பாரதி**யின் இரு படைப்புகள்" எனும் தலைப்பில் புகழ் பூத்த இலக்கிய மாத இதழான "**ஓம் சக்தி**" **தீபாவளி மலரில்** (2019) எனது ஆய்வுக் கட்டுரைகள் வெளிவந்தன. "ஓம் சக்தி" ஆசிரியர் பின்வரும் குறிப்புரையுடன் கட்டுரைகளை வெளியிட்டார்.

**கவியோகிக்கும் பெ.சு.மணிக்கும் அப்போதே கடிதத் தொடர்புகள் நடந்துள்ளன. பெ.சு.மணி அவர்கள் கவியோகியிடம் தனது மனதைப் பறிகொடுத்துவிட்டவர். தமது பரவச நிலையில் பெ.சு.மணி அவர்கள் இதனைப் படைத்துத் தந்துள்ளது ஓம் சக்தி வாசகர்களின் தவப்பயன் என்றே கூறலாம். மேலே ஓம் சக்தி ஆசிரியர் திரு.சிதம்பரநாதன் கூறியது உபசார வழக்கன்று. முற்றிலும் உண்மை.**

**கவியோகியார்** மறைவிற்குப் பிறகு, அந்த மரபின் காவலாக இயங்கும் அவருடைய பூர்வாச்ரம தமயனாரின் புதல்வர் **ஆர்.வேங்கடகிருஷ்ணன்** அவர்களுடனும் எங்கள் நட்பு தொடர்கின்றது, என்னைவிட இருவயது மூத்தவரான அவர் என்னைப் பெரியவர் என்று எனக்கெழுதும் கடிதங்களில் குறிப்பிட்டு வருவது எனக்கு வாய்த்த பெரும் பேறுகளில் ஒன்றாகும்.

அவர் தலைமையில் செயலாற்றும் **ஸ்ரீ ராமகிருஷ்ணா பள்ளியின் நூற்றாண்டு விழாவில்** என் நெஞ்சார்ந்த வணக்கங்களைப் பதிவுசெய்து அவருடைய நல்வாழ்த்துக்களுக்கு உரியவனாகிவிட்டேன் என்பதை மிக்க நன்றியறிதலுடன் குறிப்பிட்டு மகிழ்கின்றேன். விழாக்கள் பாராட்டத்தக்கன. வாழ்த்துக்கள். விழாக்கள் சீரும், சிறப்புமாக இனிதே நிகழ குருமஹராஜ் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் அவர்கள் திருவருளை வேண்டுகிறேன்.

**- பெ.சு.மணி.**

பங்களூர்-560073

24.09.2020

4. We need to have three things ; the heart to feel ; the brain to conceive and the hand to work. One who knows how to obey knows how to command. They alone live who live for others ; the rest are more dead than alive.

*- Swami Vivekananda's*



# Ma.Ko's Translation of Swami Vivekananda's Song of the Sanyasin (Sanyasi Geetham)

- Dr. Usha Mahadevan, Chennai.
(Grand Daughter of Ma.Ko.)

Swami Vivekananda had composed the Song of the Sayasin when he was at Thousand Island Park, New York in July 1895. There are 13 songs under this title and they define the ideals of a Sanyasin's life.

Panditha M.Gopalakrishnaiyer (1878-1927) who had come under the spell of the Swamiji translated them all into Tamil and published them in 1904 in the journal Vivekabodhini.

I received a copy of these translations along with my more translations of English poems from my father (Panditha Ma.Ko's son) in 1970 when I was an undergraduate student doing English Literature. When I showed them to my guru and Professor Dr. Kandaswami, he said those were high quality translations done by a bilingual expert and that at some point in future I must collect them all and have them republished. As a teenager, I felt daunted by this proposition but he continued to encourage me over the years till 1 managed to collect all his works including poems, translations, essays and plays and got them republished.

In the process of collecting them I received immense help from a number of scholars, one of them being the Vivekananda Vidya Prashasti Awardee, Shri. **Pe.Su.Mani.** He gave me excerpts from his book, **'Ramakrishna Iyakkamum Tamizhnadum.'** and the

pages he sent me were about Ma. Ko's translation of Song of the Sanyasin. He had also written that Ma.Ko was the secretary of Vivekananda Union, Madurai.

I also, managed to get **Kaviyogi Shudhananda Bharathi**'s book **'Kavikkuyil Bharathi'** where he had metioned that Ma.Ko had accompanied **King Bhaskara Sethupathy** to Pamban to receive **Sami Vivekananda.**

In the same book the author had also said that it was Ma.Ko who helped Bharathi to join Sethupathi School as a teacher and later to join Swedesamithran as sub editor.

I also received from a friend an article on Ma.Ko written by Shudhananda Bharathi, describing his meeting when Ma.Ko was working in National College, Trichy. However, I could not trace the source and so I asked Sri Pe.Su.Mani if he could help me. He immediately gave me the telephone number and address of Sri.R.Venkatakrishnan. He said that Sri Venkatakrishnan, being the President of Shudhananda Yoga Samjam, will be the right person to trace the source.

I immediately wrote to Shri R.Venkatakrishnan and I received a prompt reply within a couple of days. Yes, he had traced the pages to the autobiography of Shudhananda Bharathi, entitled **'Sodanaiyum Sadhaniyum'**. I was delighted not only to get the source, but to know that Shri Venkatakrishnan's father, Shri **J.Rangasami Iyer**, was a student of Ma.Ko. I also received an interesting snippet of how Shri Rangasami Iyer who as a student of Sanskrit received the first prize in Tamil essay writing competition conducted by Ma.Ko under the auspices of Madurai Tamil Sangam. Ma.Ko had presumed that a student of Tamil would win the first position and accordingly had purchased books on Tamil grammar for the first prize and **'Naidadham'** for the second. Wondering how the books on Tamil grammar would be useful to

the student of Sanskrit, Ma.Ko. sent for him and explained the titles of the prizes. Suggesting that the books on Tamil grammer would be more useful to the Tamil student, he offered to buy for Rangaswami Iyer a book of his choice, whereupon Rangaswami Iyer asked for **'Collected Works of Shakespeare's Globe Edition'.** Ma.Ko got that book for him and gave it along with Naidadham.

I also was thrilled to know that Rangaswami Iyer had heard the rendering of Sanyasi Geetham from Ma.Ko himself. Shri Rangaswami Iyer who later became the President of Sri Ramakrishna Vivekananda Vedanta Sangam and Sri Ramakrishna School, Sivaganga, under the management of the Sangam, desired to perpetuate the Tamil translation and used to have the Sanyasi Geetham sung by students in his school on the occasion of Swami Vivekananda Jayanthi every year.

Shri R.Venkatakrishnan used to call on me whenever he happened to come to Chennai and our talk used to center around Life and Work of **Bhagawan Sri Ramakrishna Paramahamsar, Swami Vivekananda**, writings of **Ma. Ko** and Mr. **Pe.Su.Mani.**

When all the works of Ma.Ko were finally compiled and published as **Ma.Ko. Kalanjiyam by Kaavya Publishers, Chennai,** Sri R.Venkatakrishnan suggested that the book be released in Madurai. He spoke to **Swami Kamalathmananda,** Head, Sri Ramakrishna Mutt, Madurai who spontaneosly offered to conduct the release in Madurai. **Swami Kamalathmananda** organised the entire programme at Sri Ramakrisha Mutt, Madurai and with Swamiji at the helm, Dr.TNR released the volume.

Sri R.Venkatakrishnan co-ordinated the programme with great enthusiasm and brought the students from Sivaganga to Madurai to recite all the 13 pieces of 'The Song of the Sanyasin' in English as well as Tamil. Thus it was a glorious tribute paid to Swami Vivekananda and to Ma.Ko.

On Shri. R.Venkatakrishnan's invitation, I had the pleasant opportunity to participate in Kavi Yogi Shuddhananda Bharathi's Aaraadhana at Sholapuram, near Sivaganga, where Shuddhananda Yoga Samaj was founded on 08.11.1977 and Shuddhananda Bharathi Desiya Vidyalayam High School, an aided school, was founded on 01.09.1979. He also gave me the opportunity to participate in the 91st Anniversary of Sri Ramakrishna Primary School, founded in 1922. Now Shri.R.Venkatakrishnan has chosen to bring out a booklet, Swami Vivekananda's 'The Song of the Sanyasin' and Ma.Ko's admirable translation in Tamil, on the occasion of the 99th Anniversary and the Inagural function of the Centenary of the school.

I am grateful to Shri R.Venkatakrishnan for his committed efforts in perpetuating the noble work of Swami Vivekananda and Professor Ma.Ko.

Note : **Dr. UshaMahadevan** is a retired professor of English who served in the English Dept. Hindu College, Pattabhiram, Chennai, for 25 years. Post retirement she has held several academic positions including Head, Department of English and other languages in Hindustan University, Chennai and Guest faculty, Dept. of Humanities, I.I.T. CHENNAI. Currently she is Adjunct Prof, Chennai Mathematical Institute. She is the grand daughter of the multifaceted Scholar Panditha M.Gopalakrisha Iyer (Ma.Ko.) A bilingual expert like her reputed grandfather, she involves herself in literary pursuits and translations. She has compiled and republished the collected works of Ma.Ko under the title *Ma.Ko.Kalanjiyam.*

❋❋❋

**2014 ஜுலையில் பண்டித ம.கோபாலகிருஷ்ண ஐயரின்**

# ‘ம.கோ.களஞ்சியம்’ நூல்

## மதுரையில் வெளியீட்டு விழா

பேரன்புடையீர்,

வணக்கம், நிகழும் ஜய ஆண்டு ஆனித்திங்கள் 29-ஆம் நாள் (13.07.2014) ஞாயிற்றுக்கிழமை அன்று மாலை 4.25 மணிக்குத் தொடங்கி 6.30 மணிவரை மதுரை, ரிசர்வ் லைன், புதுநத்தம் சாலை, ஸ்ரீராமகிருஷ்ண மடம் வளாகம் ஸ்ரீசாரதா வித்யாலயத்தில்

**‘ம.கோ.களஞ்சியம்’** நூல்

வெளியீட்டு விழா, நிகழ்ச்சி நிரலில் திட்டமிட்டபடி நடைபெறவுள்ளது.

வணக்கத்திற்குரிய **சுவாமிஜி கமலாத்மானந்தர்** அவர்கள் (தலைவர், ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மதுரை) விழாவிற்கு தலைமை ஏற்கின்றார்கள்.

சேக்கிழார் அடிப்பொடி

முதுமுனைவர்.**தி.ந.இராமச்சந்திரன்** அவர்கள்

நூலை வெளியிடுகின்றார்கள்.

மதுரைக் கல்லூரி
முதல்வர்.Dr.**ஆர்.முரளி** அவர்கள்
தமிழ்த்துறை முனைவர்.**கே.முத்துவேல்** அவர்கள்
திருச்சி தேசியக் கல்லூரி
தமிழ்த்துறை முனைவர்.**கே.ராஜரத்தினம்** அவர்கள்

மதுரை செந்தமிழ்க் கல்லூரி
செயலர். திரு.**ஆர்.குருசாமி** அவர்கள்
முதல்வர்.முனைவர் **மு.மீனா** அவர்கள்
ம.கோ.ஐயர் அவர்களின் பெயர்த்தி
**டாக்டர்.உஷா மஹாதேவன்** அவர்கள்

பங்கேற்க இசைந்துள்ளார்கள்.

தாங்கள் விழாவிற்கு வருகை தந்து சிறப்பிக்க வேண்டுகிறோம்.

**இவண்**

**ம.கோ.குடும்பத்தினர் - விழாக்குழுவினர்**

# நிகழ்ச்சி நிரல்

## 13.07.2014 ஞாயிறு

மாலை–4.25 : மங்கல இசை

4.35 : இறை வணக்கம்

4.36 : ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ குரு வணக்கம்

4.38 : அன்னை ஸ்ரீசாரதாமணிதேவி வணக்கம்

4.41 : சுவாமி விவேகானந்தர் வணக்கம்

4.44 : வரவேற்புரை

திரு.**ஆர்.வேங்கடகிருஷ்ணன்** அவர்கள்

5.00 : அமரர்.பண்டித ம.கோபாலகிருஷ்ண ஐயர் படத்தை திறந்து வைத்து, தலைவர் சிறப்புரை வணக்கத்திற்குரிய

**சுவாமிஜி கமலாத்மானந்தர்** அவர்கள்

5.20 : சந்நியாசி கீதம் பாடல்கள்

மாணாக்க, மாணாக்கியர் சிவகங்கை பள்ளிகள்.

5.30 : **ம.கோ.களஞ்சியம்** நூல் வெளியிட்டு சிறப்புரை சேக்கிழார் அடிப்பொடி

முதுமுனைவர் **தி.ந.இராமச்சந்திரன்** அவர்கள்

5.45 : வாழ்த்துரை–பதிப்பகத்தார்,

காவ்யா **திரு.சண்முகசுந்தரம்** அவர்கள்

5.50 : **Dr.ஆர்.முரளி** அவர்கள்

முதல்வர், மதுரைக் கல்லூரி, மதுரை.

5.55 : முனைவர்.**கே.ராஜரத்தினம்** அவர்கள்

தலைவர்,தமிழ்த்துறை, தேசியக் கல்லூரி,திருச்சி

6.05 : முனைவர் **கே.முத்துவேல்** அவர்கள்

தலைவர், தமிழ்த்துறை மதுரைக்கல்லூரி, மதுரை

6.15 : ஏற்புரை: டாக்டர்.**உஷாமஹாதேவன்** அவர்கள்

6.25 : நன்றி நவிலல் : டாக்டர்.**எஸ்.முத்துராமன்** அவர்கள்

6.30 : நாட்டுப்பண்



இந்நூலின் முதல் தொகுப்பு
எனது தந்தையார்
**ஜே. ஆர்.** அவர்களுக்கு
சமர்ப்பணம்

- ***R.*** வேங்கடகிருஷ்ணன்



Om Namo Bagavathe Rama Krishnaya

# Song of the Sanyasin

***by Swami Vivekananda***



சுவாமி விவேகானந்தரின்

**சந்நியாசி கீதம்** தமிழாக்கம்

**பண்டித ம. கோபாலகிருஷ்ணய்யர்**





Wake up the notel -
The song that had its birth
Far off where worldly taint
Could never reach;
In mountain caves, and
Glades of forest deep,
Whose calm no sigh
For lust or wealth or fame
Could ever dare to break;
Where rolls the stream
Of knowledge, Truth and
Bliss that follows both. -
Sing high that note
Sanyasin bold! say, 'Om tat sat, Om!'

Strike off thy fetters!
Bounds that bind thee down
Of shining gold,
Or darker, baser ore;
Love-hate, good-bad
And all the dual throng
Know, slave is slave,
Caressed or whipped, not free
For fetters though of gold
Are not less strong to bind
Then, Off with them
Sanyasin bold! say, 'Om tat sat, Om!'



மனவலி படைத்த மாசிலாத் துறவீ!
சுவைமலி இன்பச் சுரந்தனை எழுப்புதி!
மகிதலக் கதைஉறா வெகுதொலைக்கப்பால்,
புலப்பகை வெறுக்கை புகழ்இலை
அமைதியைக்
கலைப்பதற் கென்றும் தலைப்படாத்தலத்தை
அறிவுமெய் என்னும் அருவிகளுடனே
பரமா நந்தத் திருமா நதிபாய்
வெற்புறு குகையைப் பொற்புறு வனத்தைப்
பிறப்பிட மாக்கொடு சிறப்பிமிக் கார்ந்தே-
எழும்கீ தத்தை முழுங்குதி நன்கு!
ஓதுக நீ 'ஓம் தத் ஸத் ஓம்!' என. (1)

திடம்உறு நெஞ்சத் தடல்மிகு துறவீ
இறுக்கிடு தளைகளை நொறுக்குதி அவைதாம்
ஒள்ளிய அரும்பொற் றளையா யினும் சரி.
எள்ளிய கரும்பொற் றளையா யினும்சரி
சுகமுறு விருப்பும் அகம் வெறு வெறுப்பும்.
நன்மையும் நன்மை இன்மையு மாதித்
தொந்தம் தாம்இப் பந்தத் தொகுதி
பசையொடு தழீஇயினும் கசையடி தரினும்
அடிமை அடிமை ஆகுவ னேஅலால்
சற்றும் சுவேச்சை உற்றவன் அலன்அறி
பொற்றனை ஆயினும் பற்றிப் பிணிப்புழிக்
குன்றா வலிஉடைத் தன்றோ? ஆதலின் (2)



Let darkness go;
The will o'the wisp that leads
with blinking light
To pile more gloom on gloom
This thirst for life
For ever quench; It drags
From birth to death, and
Death to birth, the soul
He conquers all
Who conquers self, Know this;
And never yield,
Sanyasin bold! say, 'Om tat sat, Om'

"Who sows must reap" they say.
And cause must bring
The sure effect. Good- good
Bad. bad; and none
Escape the law
But who so wears a form
Must wear the chain
Too true; but far beyond
Both name and form
Is Atman, ever free,
Know thou art That,
Sanyasin bold! say, 'Om tat sat, Om!'



எதற்கும் அஞ்சா இயல்புடைத் துறவி
இடுக்கன் மேன்மேல் அடுக்கும் பொருட்டுச்
சிமிட்டிச் சிமிட்டிச் சிற்றொளி காட்டி
இட்டுச் சொல்லும் துட்டத் தீப்பேய்
அந்த காரம் அடியொடு தொலைத்தி-
வாணாள் ஆசையைப் பேணா தொழிக,-
ஆ! ஆ!! அதுவே ஜீவாத் மாவைப்
'புநரபி ஜநநம் புநரபி மரணம்'
என்னும் இவற்றிற் கீர்த்துச் செல்லும்,
தான்அடங் கொருவன் தான்அடக் குவன்எலாம்,
ஈதறிந் தென்றும் இடம்கொடா திருத்தி
ஓதுக நீ 'ஓம் தத் ஸத் ஓம்!' என. (3)

அஞ்சுதல் அறியா நெஞ்சநற் றுறவீ!
"எவன் விதைப் பவனோ அவன்அறுப் பவனே,
காரணம் உளவேல் காரிய மும்உள
நன்மை விதைத்தவன் நன்மை அறுப்பன்.
தீமை விதைத்தவன் தீமை அறுப்பன். இவ்
விதியினின்றும் விலக்கா வார்இலர்
உறுப்பெற் றோர்க்கெலாம் உறுதளை உண்" டெனப்
புகல்வர் இதனிற் பொய்இலை. ஆயினும்
நாமரூபம் ஆம்இவற் றப்பால்
என்றும் தடையற நின்றுள தான்மா
அதுதான் நீஎன் றறியக் கடவை
ஓதுக நீ 'ஓம் தத் ஸத் ஓம்!' என. (4)



They know not truth
Who dream such vacant dreams
As father, mother,
Children, wife and friend
The sexless Self!
Whose father He, Whose child?
Whose friend, whose foe
Is He who is but one?
The Self is all in all
None else exists; Know thou art that
Sanyasin bold! say, 'Om tat sat, Om'

There is but One - The Free-
The Knower - Self!
Without a name,
Without a form or stain
In Him is Maya,
Dreaming all the dream
The Witness, he appears
As Nature, Soul;
Know thou art That
Sanyasin bold! say, 'Om tat sat, Om!'



ஒன்றினும் திரியா உளம்உடைத் துறவீ!
பெற்றோர் மக்கள் உற்றோர் பெண்டிர்
இத்தகை யாவும் மித்தையே என்னக்
காணா தார்மெய் காணாதாரே
ஆண்பெண் இல்லா ஆன்மா வானது
எவர்க்கே தந்தை, எவர்க்கே மைந்தன்,
எவர்க்கே பகைஅது? எவர்க்கே உறவது?
யாவற் றுள்ளும யாவும் ஆகிஅவ்
ஒன்றே உளஃ தன்றிமற் றிலையால்
அதுதான் நீஎன் றறியக் கடவை.
ஓதுக நீ 'ஓம் தத் ஸத் ஓம்!' என. (5)

சலியா மனத்து வலியார் துறவீ
ஒன்றே உளதவ் ஒன்றும் என்றும்
தன்வயத் துவமாய்த் தான் இருப்பதுவே
யாவையும் உணர்த தாவிலாத்தனிமை
நாம ரூபம் ஆம் இவை இல்லது.
களங்கம் இன்றி விளங்கும் பொருள் அது
இவ்வெளி மயக்கெலாம் அவ்வொரு பொருட்கண்
உளதே ஆகும். பளகறு லோகக்
காட்சி யாகவும் சாட்சி யாகவும்
ஆன்மா ஆகவும் அப்பொருள் தோன்றும்.
அதுதான் நீ என்ற றியக் கடவை
ஓதுக நீ 'ஓம் தத் ஸத் ஓம்!' என. (6)



Where seekest thou
That freedom, friend, this world
Nor that, can give?
In books and temples
Vain thy search. Thine only
Is the hand that holds
The rope that drags thee on;
Then cease lament. Let go thy hold,
Sanyasin bold! say, 'Om tat sat, Om'

Say "Peace to all
From me no danger be
To aught that lives
In those that dwell on high
In those that lowly creep
I am the Self of all
All life, both here and there,
Do I renounce, All heavens, earths
And hells, All hopes and fears."
Thus cut thy bonds,
Sanyasin bold! say, 'Om tat sat, Om!'



ஸாகஸம் மிகுந்த யூகசந் யாஸி
இவ்வுல கேனும் அவ்வுல கேனும்
ஈயாக் கவேச்சை எங்கே தேடுவை?
ஏடு கோயிலிற் றேடுதல் வீணே
நின்கர மேதான் நின்னை மேன்மேல்
இழுத்துச் செல்லும் இரும் பாசத்தைப்
பற்றிய தால்அப் பற்றினை உதறுக
புந்தி மயங்கிச் சிந்தை மாழ்கலை
ஓதுக நீ 'ஓம் தத் ஸத் ஓம்!' என. (7)

சாற்றற் கருமன ஆற்றல் சால் துறவீ!
"பொங்கும் மங்களம் எங்கும் தங்குக
இன்னா வேண்டாம் என்னால் உயிர்க்கே
உயர்ந்தோர் மாட்டும் இழிந்தோர் மாட்டும்
யாவற் றுள்ளும் மேலியோன் யானே.
இம்மையும், அம்மையும் வெம்மைகூர் நரகும்
மண்ணும் விண்ணும் எண்ணும் நலமும்
தீதும்வேண் டிலன்" என ஓதிஅவ் வணமே
உறுதளை அனைத்தும் அறஒழித் திடுக
ஓதுக நீ 'ஓம் தத் ஸத் ஓம்!' என. (8)





Head thou no more
How body lives of goes.
Its task is done.
Let Karma float it down;
Let one put garlands on,
Another kick
This frame; say naught
No praise or blame can be\
Where praiser, praised, and
Blamer, blamed are one
Thus be thou calm,
Sanyasin bold! say, 'Om tat sat, Om'

Truth never comes
Where lust and fame and greed
Of gain reside
Noman who thinks of woman
As his wife can ever
Perfect be;
Nor he who owns
The least of things, not he
Whom anger chains
Can ever pass through Maya's gates
So give these up.
Sanyasin bold! say, 'Om tat sat, Om!'



உறுதிகொள் உள்ளத் தொருபெருந் துறவீ!
இந்தச் சடலம்இங் கெவ்வா றாக
ஆம் போம் என்னா ஆய்ந்திடல் ஒழிக
அதற்குள வேலையை அதுமுடித் திடுக
கர்மவெள் ளத்தின் கதிஅது செல்க
ஏய நன்மாலை வேயினும் அதன்மேல்
மனவிருப் பெய்தி மகிழஎவும் வேண்டாம்.
யாக்கையை ஒருவன் தாக்கி உதைப்பினும்
கோப தாபம் கொள்ளவும் வேண்டாம்.
புகழ்கின் றோனும் புகழ்உறு வோனும்
இகழ்கின் றோனும் இகழ்உறு வோனும்
ஏகனே அன்றிஅ நேகரே அவரால்
இகழ்ச்சி புகழ்ச்சிகள் எண்ணில் ஒன்றே எனத்
தேறி உணர்ந்தே ஆறுதல் அடைக.
ஓதுக நீ 'ஓம் தத் ஸத் ஓம்!' என. (9)

தைரியம் மிகுந்த செயிரறு துறவீ!
காமம் புகழ்பொருள் தாமுள இடத்து
வாய்மைஎந் நாளும் வரமாட் டாது
மாதரை மனைவியாய் மதிப்பவன் எவனும்
பூரணத் துவம்உறக் காரணமேஇலை.
தினைஅள வேனும் தனதெனக் கொள்வோன்.
சினமெனும் தளையிற் சிக்குவோன், இவர்கள்
மாயை என்னும் வாயில் கடவார்
ஆதலின் இவற்றை அறஒழித் திடுக
ஓதுக நீ 'ஓம் தத் ஸத் ஓம்!' என. (10)



Have thou no home
What home can hold thee, friend?
The sky thy roof;
The grass thy bed, and food,
What chance may bring
Well cocked or ill - judge not.
No food or drink can taint
That noble Self
Which knows itself;
The rolling river; free
Thou ever be
Sanyasin bold! say, 'Om tat sat, Om'

Few only know the truth,
The rest will hate
And laugh at thee Great One!
But pay no heed,
Go thou, the free
From place to place, and help
Them out of darkness
Maya's veil, without
The fear of pain
Or search for pleasure , go
Beyond them both
Sanyasin bold! say, "Om tat sat, Om"



திறம்பெறு நெஞ்சத் தறம்பெறு துறவீ!
உறைவிடம் எதுவும் உனக்கென வேண்டாம்
நின்னைக் கொள்ளும் வீடெது? நேய
விசும்பே கூரை, பசும்புல் படுக்கை
தற்செய லாகத் தான்கிடைப் பதுவே
உண்டி ஆகும். அவ் உண்டிநன் றாக
அட்டிருப்பினும், அது கெட்டிருப்பினும்
ஏனேல்,
அன்னபா னியம்எதும் தன்இயல் புணர்ந்த
மன்னிய தூயனை மாசுறுத் தாவே.
ஓடிப் புரளும் ஒருநதி போல
என்றும் சுவேச்சை ஒன்றி இருத்தி
ஓதுக நீ 'ஓம் தத் ஸத் ஓம்!' என. (11)

உரனுடை உள்ளத் தொருபெருந் துறவீ!
ஆனமெய்ப பொருளை அறிபவர் சிலரே
ஏனையோர் நின்னை இழிப்பர் வெறுப்பர்
மேலோய்! அதை ஓர் காலும் கருதேல்
இஷ்டப்படி எங் கெங்கு மேநீ
எய்தும் இன்பமும் நைதரு துன்பமும்
எண்ணா தேகி அன்னோர் போர்த்த
மாயை என்னும் மாஇருள் நீக்குதி
ஓதுக நீ "ஓம் தத்ஸத் ஓம்!" என. (12)



Thus day by day,
Till Karma's power spent
Release the soul for ever;
No more is birth
Nor I, nor Thou.
Nor God, nor Man. The I
Has All become,
The All is I and Bliss
Know thou art That,
Sanyasin bold! say, 'Om tat sat, Om'



புலப்பகை வெல்மனப் பலப்பெருந் துறவீ!
கர்ம பந்தம் கழியும் மட்டும்
ஒவ்வொரு நாளும் இவ்விதம் முயன்று
சேதநன் தன்னைத் தீதுறு தளையின்
நின்றும் விடுக்குதி; என்றும் பிறப்பிலை
'நானும்' 'நீயும்' நரரும் கரரும் இல்.
'யான்' என் பதுவே யாவும். யாவும்
யானே. அதுவே தான்ஆ நந்தம்
அதுதான் நீஎன் றறியக் கடவை.
ஓதுக நீ 'ஓம் தத் ஸத் ஓம்!' என.

(13)

* சுவாமி விவேகானந்தர் புதிய இந்தியாவிற்கும் பழைய இந்தியாவிற்கும் ஓர் இணைப்புப் பாலமாக விளங்குகிறார். பண்டைய மெய்ஞ்ஞானத்திற்கும் இன்றைய விஞ்ஞானத்திற்கும் ஓர் இணைப்புப் பாலமாக விளங்குகிறார். பழைய தலைமுறையைச் சேர்ந்தவர்களுக்கும் இன்றைய தலைமுறையை சேர்ந்தவருக்கும் ஓர் இணைப்புப் பாலமாக விளங்குகிறார். மேற்கு நாடுகளின் சிந்தனைகளுக்கும் கிழக்கு நாடுகளின் சிந்தனைக்கும் ஓர் இணைப்புப் பாலமாக விளங்குகிறார். சமயத் தலைவர்களுக்கும் சமுதாயத் தலைவர்களுக்கும் ஓர் இணைப்புப் பாலமாக விளங்குகிறார்.

* சுவாமி விவேகானந்தரிடம் கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம், ராஜயோகம் உண்டு. சாந்தம் கூறும் சக்தி வழிபாடு, சைவம், வைணவ கருத்துக்களும் உண்டு. சாந்தம், பாவம், சமய சமரசம் பற்றிய கருத்துக்களும் உண்டு. சமுதாய சீர்திருத்தக் கருத்துக்களும் உண்டு. மக்களிடையே சமத்துவம், தீண்டாமை ஒழிப்பு, ஏழை எளியவர்களை உயர்த்துதல், பெண்கள் முன்னேற்றம், கலைகள், தொண்டு புரிதல் போன்ற சமுதாய நலனுக்கு உகந்த கருத்துக்களும் உண்டு. அவர் ஓர் ஆன்மீக சூப்பர் மார்க்கெட் போன்றவர். ஆனால் அடிப்படையில் அவர் பூரண ஞானி (God Man).

**- சுவாமி கமலாத்மானந்தர்**

* இராமாயணத்தில் கிஷ்கிந்தா காண்டத்திலிருந்து சுந்தர காண்டம், யுத்த காண்டம் ஆகிய மூன்று காண்டங்களிலும் ஆஞ்சநேயர் வருகிறார். பல சாதனைகளை நிகழ்த்துகிறார். எல்லையற்ற வலிமை கொண்டவர் தன்னுடைய வலிமையை உணராத ஆஞ்சநேயருக்கு அவருடைய பலத்தை ஜாம்பவான் நினைவுபடுத்துகிறார். அதுபோன்று இந்திய மக்களுக்கும் இந்து மதத்தினருக்கும் குறிப்பாக இந்திய இளைஞர்களுக்கும் தங்களது வலிமையை நினைவுபடுத்தியவர் தேசபக்த ஞானி சுவாமி விவேகானந்தரே.

**- சுவாமி கமலாத்மானந்தர்**

## வில்லியம் ஷேக்ஸ்பியர் கவிதைகளின்
## தமிழறிஞர் ம.கோ. அவர்களின் தமிழாக்கம்

### திருப்தி

என் முடி இதயத்துள்ளது: என் சிரம் மீது அஃது இல்லை.
மன்னிய வைரம் இந்திய மணி இவை குறைந்தது அன்று.
அன்னது காணுவதற்கே அரியது. அதன் பேர் 'திருப்தி'
மன்னரும் நுகர்த்திலதை மாண்புறு முடியதாமே

### நற்பெயர்

ஆடவர்க் காயினும் அரிவையர்க் காயினும்
ஆருயிர்க்கு அருகில் கலம் ஆகும் 'நற்பெயரே'
எனது பணப்பையினை அபகரிப்பவன்
அற்பத் துரும்பையே அபகரிக்கின்றான்
அஃதோர் அற்பம்; அதுவும் இலை அது
எனதாய் இருந்தது; இவனதாய் உள்ளது
ஆயிரம் பேர்களுக்கு அடிமையாய் முன்னம்
இருந்திருக்கின்றது. எனது நற்பெயரை
என்னிற் கவரும் இழிதகை யோனோ
தனைப் பணக்காரன் எனச் செய்யாததும்
என்னை வழிமுன் எனச் செயவல்லது
ஆனதை உண்மையில் அபகரிப்பவனே.

### கோழைகள்

(இயற்கையில்) மரணம் எய்திடும் முன்னர்
(பயத்தால்) கோழைகள் பன்முறை இறப்பர்
வீரர் ஓர் முறையே விளி நுகர்ந்திடுவர்
யாண்டெறும் எய்த வேண்டிய சாவு
வந்திடுங் காலை வந்தே தீரும்
என்பதை அறிந்தும் மண்டதை மருளலே
இதுவரை யான் கேட்டிருக்கிற எல்லா
அதிசயங்களில் எல்லாம் அதி அதிசயமே!

18-ம் நூற்றாண்டில் ஆங்கிலக் கவுஞர் வில்லியம் கௌபர் எழுதிய ஏற மூவாயிரம் வரிக் கவிதையில் பேராசிரியர் ம.கோ. அவர்கள் தேர்ந்தெடுத்து தமிழாக்கம் செய்த வரிகள், விடுதலைப் போராட்ட கனல் தெறிக்கும் பாடலாக உருவெடுத்தன.

"அவன் ஓர் அரசன் ஆயினும், அதிலும்

இங்கிலாந்துக்கே இறைவனாய்

இருப்பினும், மனவலி இல்லா மனிதனாய்

இருக்கலாம். அதிகாரப்ரியனாகிய வீரனாய், அவன்தான் ஆணையை அவ்வழிச் செலுத்தாமல் குடிகள் விரும்பிக் கொடுப்பதைக் காட்டிலும் அதிகம் பெறப் பேராசையும் கொள்ளலாம்; அவர்கள் அளிப்பதற்கதிகமாய அடைய ஆசைப்படுவது தேசத்துரோகமே. ஆணை செலுத்தவும், அன்பொடு காக்கவும் அரசாங்கத்தினை அலங்கரித்திடவுமே எம்மவன் அவன். ஆனால் என் அரசியலனை மாற்றவும் புரட்டவும் மற்றெதும் செயவும் இல்."

2. Be in the world but not of the world like the lotus leaf. Even the least good work done for others awakens the power within, gradually instils into the heart the strength of a LION.

"Ekam sath Vipra Bahuda Vadanti" - Rig Veda - Truth is ONE ; saints interpret differently.

*- Sri Ramakrishna Paramahamsa*

# Merrcy

The quality of mercy is not strained;
It droppeth, as the gentle rain from heaven
Upon the place beneath; It is twice blest;
It blesseth him that gives, and him that takes.
'T is mightiest in the mightiest; it becomes
The throned monarch better than his crown;
His sceptre shows the force of temporal power.
The attribute to awe and majesty,
Wherein doth sit the dread and fear of kings;
But mercy is above this sceptred sway,
It is enthroned in the hearts of kings;
It is attribute to God himself;
And earthly power doth then show likest God's;
When mercy season's justice. Therefore, Jew,
Though justice be thy plea, consider this-
That, in the course of justice, none of us
Should see salvation; we do pray for mercy;
And that same prayer doth teach us all to render
The deeds of Mercy.

- William Shakespeare's Merchant of Venice

# இரக்கம்

(இது ஷேக்ஸ்பியர் இயற்றிய Merchant of Venice என்பதினின்றும் ம.கோ.வால் மொழிபெயர்க்கப்பெற்றது.)

பிறர்வற் புறுத்தப் பிறந்திடல் என்றல்
இரக்கம் என்பதன் இயல்பா காது.
விண்ணினின்றும் மண்மீ திழியும்
இனிய மழைஎன இழிவதிவ் இரக்கம்
இரண்டு விதத்தினம் ஈயும் இதுநலம்.
இரங்கற்படுவோன் இரங்குவோன் என்னும்
இருகிறத் தார்க்கும் ஈதருள் புரிந்திடும்
வலிமிக் காரிடம் வலிமைமிக் குடையது.
அரியணை மீதமர் அரசனுக் கன்னவன்
புனைமுடி யினும்மிகப் பொருத்த முடையது.
அரசன் செங்கோல் அவனியில் அவனது
ஆணையின் ஆற்றலுக் கறிகுறி யாகும்.
பயமும் மாட்சியும் பயப்பதன் பண்பாம்.
அரசர்பால் திகழும் அச்சமும் அதில்உறும்.
இரக்கம்இக் கோலினும் ஏற்றம்மிக் குடையது:
அரசர் மனச்சிங் காதனத் தமர்வது.
ஈசர்க் கேஅது இயைந்த ஓர்குணம்.
நீதியோ டிரக்கமும் நிழ்வுறுங் காலையில்
மண்இறை ஆணையும் விண்இறை ஆணைஆம்.
ஆதலின், யூத! நீதியைப் பெறுவதே
நின்வழக் காயினும் நீ நினை இதனை;
கேவலம் நியாயமே தேவன் கைகொளின்
நம்மவர் எவருமே நற்கதி காண்கிலம்.
இரங்கிமன் னிக்கநாம் ஈசனை வேண்டுவம்.
அதேவேண் டுகோள்நாம் அனைவரும் மற்றவர்க்
கிரக்கச் செயல்செய இனிதுகற் பிக்குமே.

# Abu Ben Adham and the Angel

Abou Ben Adham - (May his tribe increase)
Awoke one night from a deep dream of peace,
Ane saw, within the moonlight in his room,
Making it rich, and like a lily in bloom,
An angel writing in a book of Gold:-
Exceeding peace had made Ben Adham bold,
And to the presence in the room he said,
"What writest thou?" - The vision raised its head,
And with a look made of all sweet accord,
Answered, "The names of those who love the Lord."
"and is mine one?" said Abu. "Nay, not so,"
Replied the Angel. Abu spoke more low,
But cheerly still, and said, "I pray three, then,
Write me as one that loves his fellow - men"
The Angel wrote, and vanish'd. The next night
It came again with a great wakening light,
And show'd the names whom love of God had bless'd
And lo! Bin Adhem's name led all the rest.

-Leigh Hunt.

## ஆபு பென் ஆதமும் அமர தூதனும்

(தன்உயிரைப்போல் மன்னுயிரை நேசிப்போரே பகவத் பக்தியிற் சிறந்தவர் என்ற அரிய நீதியைப் போதிக்கும் இவ்விஷயம் "Leigh Hunt" என்ற ஆங்கிலப்புலவர் இயற்றிய "Abu Ben Adham & The Angel" என்பதன் ம.கோ. தமிழ்மொழிபெயர்ப்பு.)

ஆபு பின் ஆதம் - அவன் குலம் ஓங்குக! -
நீடிய சுகத்துயில் நின்றும் ஓர் இரா
விழித்தெழுந் தனன் அவன். விண்ணவன் ஒருவன்
நன்கலர் அல்லி நாண் மலர் என்னச்
சந்திரி கையினைச் சுந்தர மாக்கி,
அந்தில வினில், தன் அறையினில், ஓர்பொன்
ஏட்டினில் ஏதோ எழுதக் கண்டணன்.
அப்போ திருந்த அதிபே ரமைதி பின்
ஆதமைத் தைரியம் அடையச் செய்தது.
அறையினில் தன்முன் அங்கு நின்றோனை
"எழுதவ தென்னை?" எனக்கேட் டனன் அவன்.
தான்குனித் திருந்த தலையினை நிமிர்த்தி
ஆர்வ மிக்க பார்வையி னோடும்
"ஈசனிடத்தே நேசமுள்ளோர்களின்
நாமத் தான்" என நவின்றதவ் வுருவம்.
"என்னதும் ஒன்றோ?" என்றனன் ஆபு.
"இலை, இலை" என விடை ஈந்தனன் தேவன்.
தன் குரல் தாழ்த்தியும் தளரா மனத்துடன்
ஆபு கூறினன்: "அங்ஙன மாயின்,
'ஒத்த சிருஷ்டியில் உற்ற அன்புடையான்'
என வரைந்திட உனை இறைஞ் சுகிறேன்" என.
வரைந்தனன் வானவன். மறைந்தனன். மறுநாள்
இரவினில், அவனை எழுப்புபே ரொளியுடன்
அந்தத் தேவனை அவன் முன் தோன்றி
இறைநே சப்பேறு எய்தியோர் பெயர்களை
எடுத்துக் காட்டினேன். என்னே! முதன்மை
யாக நின்றது பின் ஆதமின் பெயரே!

# The Seven Ages of Man

All the world's a stage

And all the men and women merely players:

They have their exits and their entrances;

And one man in his time plays many parts, -

His acts being seven ages. At first, the Infant,

Mewling and pucking in the nurse's arms.

Then the whining school - boy, with his satchel

And the shining morning face, creeping like snail

Unwillingly to school, And then the Lover,

Sighing like furnace, with a woeful balled

Made to his mistress's eyebrow.

Then a Soldier,

Full of strange oaths, and bearded like the pard;

jealous in honour, sudden and quick in quarrel,

Seeking the bubble reputation

Even in the cannon's mouth, And then the Justice,

In fair round belly with good capon lin'd,

With eyes severe and beard of formal cut,

Full of wise saws and modern instances,-

(cont.)

And so he plays his part. The sixth age shifts
Into the lean and Slipper'd Pantaloon,
With speatacle on nose and pouch on side;
His youthful hose well sav'd, a world too wide
For his shrunk shank; and his big manly voice,
Turing again toward childish treble, pipes
And whistles in his sound. Last scene of all,
Is second childishness and mere oblivion;
Sans teeth, sans eyes, sans taste, sans-everything.

- William Shakespeare

**11. Swami Vivekananda** has forged the chain which is to bind the East and the West together - the golden chain of a common sympathy, of a common humanity and a common and universal religion. Can humanity then, be ever too thankful to Swami Vivekananda? Can his fellow countrymen be ever too proud of him or be ever too grateful to him?

*- THE INDIAN MIRROR - 21.07.1897*

## மானிடரின் ஏழு பருவம்

**ம.கோ.வின் மொழியாக்கம்**

நானிலம் யாவும் ஓர் நாடக சாலையே.
ஆண்பெண் அனைவரும் அதில் நடிப்பவர் தாம்
மறைவும் தேற்றமும் மற்றவர்க் கிங்குள.
ஆயுள் நாளில் ஏயபல் வேடம்
எடுத்தவர் புவியில் நடிப்பவர் ஆவர்.
ஒவ்வொரு வருக்கும் ஓரெழு பருவம்ஆம்
கக்கிக் கதறக் கைப்புறத் தேந்திச்
செவிலித் தாய்வளர் சவலைப் பருவமே
பருவங் களில்முதற் பருவ மதாகும்.
தூண்டா நிற்ப, வேண்டா வெறுப்போடு
புத்தகப் பையொடு நத்தைபோல் ஊர்ந்து
மினுங்கிய வதனம் சிணுங்கிச் சிணுங்கிக்
காலைப் பொழுதிற் கல்விக் கழகம்
மெள்ளச் செல்லும் பள்ளிப் பிள்ளை - பின்
காதலித் திருக்கும் காதலி தனது
புருவமாதிய புழுங்கிய மனத்துடன்,
தண்பா மாலை சாற்றித் துதித்து
மட்டிலா உலைபோல் நெட்டுயிர்ப் பெய்தும்
காதல னாகும் காளை - அதன்பின்,
அதிசயச் சபதமும் அடர்புலித் தாடியும்
பேரழியாவகைப் பேணும்நல் ஊக்கமும்
எதற்கும் சண்டைக்கு இழுக்கும் படியாச்
சடுதியிற் கோபம் ஜனிப்பதூஉங் புகழ்பெறப்
பீரங்கி வாயில் சீர் அங்கம் போக்கவும்
சித்தமா இருக்கும் யுத்தவீரன் - பின்,
செழிப்புறு சேவற் கொழுப்பினால் ஆகிய
பேரெழில் வாய்ந்த பேழைபோல் வயிறும்
நீர்த்தாட் சண்பு நேத்திரம் இரண்டும்

வழங்கும் காலத் தொழுங்கின் படியே
நறுக்கிய தாடியும் முறுக்கிய மீசையும்
நல்உப தேசமும் நாடறி வழக்கும்
இன்ன யாவும் இனிதுறக் கொண்ட
பண்பார் நீதி பதி - அதன் பின்னர்
கச்சல் தேகமும் கால்களிற் சோடும்
மூக்கிற் றரிந்து நோக்குகண் ணாடியும்
இருகவுள் தோலாம் இரும்பை வீழ்ச்சியும்
பாலியத் தினிது பத்திரப் படுத்திய
மேற்சோ டிரண்டும் மிகப் பெரிதாம்படி
ஒடுங்கிச் சுருங்கிய ஓரிரு பாதமும்
ஆணவப் பெருங்குரல் அனைத்தையும் இழந்து
குழவியின் குறுகிய குரலினைப் போன்று
கீச்சென ஒலிக்கும் பேச்சையும் கொண்டு
தேசெலாம் குன்றிய மாசுலாம் குரூபியே
ஆறாம் பருவம் ஆம், அதன் பின்னர்
பல்லும் பார்வையும் சொல்லும் சுவையும்
யாவையும் இழந்து யாவையும் மறந்து
மறுவலும் சேய்என மதித்தளர்வு எய்துவோன்.
அடிக்கடி மாறும்இவ் அற்புத சரிதை
முடியும்இக் காட்சி யொடு முடிந்திடுமே.

> 5. Great Indian luminaries of pre-independence days were unanimous in recognizing Swami Vivekananda's immense influence on national mind, moving into the path of liberation in thought, word and deed.

## சான்றோர்களின் பாராட்டு

பேராசிரியர் ம.கோபாலகிருஷ்ணய்யா அவர்களின் 'ஆங்கிலக் கவிதைகளின் தமிழாக்கம் பற்றிய **தேசிய மகாகவி சுப்பிரமணிய பாரதியார்** 'இந்தியா' இதழில் பாராட்டி எழுதிய மதிப்புரை :

"நாம் முதலில் வாசித்தவுடன் மொழிபெயர்ப்பென்றே நினைக்கவில்லை. சாதாரணமாய் மொழிபெயர்க்கப்பெற்ற வசனங்கள் விசேஷமாய்ச் செய்யுங்கள், பாறைக் காட்டில் குதிரை வண்டி போவது போல 'கடகட'வென்று ஒலிக்கும். ஆனால் நமது ஐயர் செய்திருக்கும் மொழிபெயர்ப்பானது தெரிந்தவர்க்கன்றி மற்றவர்க்கு மொழிபெயர்ப்பெனவே தோன்றாது. இது அதை வாசிப்போர் மனதிற்கே தோன்றும்.'"Admiration by Retired I.A.S. Officer **Shri.V.Sundaram** :

"Ma.Ko. had the good fortune of belonging to an age of towering literary giants like Dr. U.V.Swaminatha Iyer (1855-1941), Dr.G.U.Pope (1820-1920), A.Madhaviah (1872-1925) and Mahakavi Subramanya Bharathi (1882-1921). In that age, Ma.Ko. carved out a special niche for himself as an outstanding Man of Letters in both Tamil and English.

### ராஜாஜி

சுவாமி விவேகானந்தர் சாதுவான மஹரிஷிகளின் வழியில் வந்தவரல்ல; அவர் பரசுராமர், விஸ்வாமித்திரர் போன்ற மஹரிஷிகளின் வழியில் வந்தவர்.

### ஜீவானந்தம்

சுவாமி விவேகானந்தர் சிகாகோ சர்வசமயப் பேரவையில் பங்கு கொண்டார். அங்கு பல்வேறு மதங்களைச் சேர்ந்த பிரதிநிதகள் எலலாரும், "சீமான்களே, சீமாட்டிகளே, (Ladies and

Gentlemen) என்று தங்களுடைய சொற்பொழிவைத் தொடங்கியபோது, நமது இந்தியத் துறவி ஒருவர் மட்டும் 'கணீர்' என்ற குரலில் அமெரிக்க நாட்டுச் சகோதரிகளே, சகோதரர்களே (Sisters and Brothers of America) என்று தன் சொற்பொழிவைத் தொடங்கியது அமெரிக்காவையே ஒரு குலுக்கு குலுக்கியது.

உலகம் அனைத்தும் ஒரே குடும்பம் என்ற மனப்பக்குவத்தைப் பாராட்டும் வகையில், 'சகோதரிகளே, சகோதரர்களே! என்று அந்த இரண்டு சொற்களும் சுவாமி விவேகானந்தருக்கு அமெரிக்காவையே வென்று தந்தன."

Dr. G.U.Pope : "If I had not read Sir Walter Scott, I would have pronounced Ma.Ko.'s 'Patriotism (சுதேசாபிமானம்). The original and Sir Walter Scott's Translation.

**பண்டிதமணி. மு.கதிரேசன் செட்டியார்** :

ஆங்கில மொழிபெயர்ப்புக்களாகிய '**ஸந்யாசி கீதம், பாரத ஜாதீய கீதம்**' முதலியவைகளைத் தனித் தமிழரொருவர் படித்தால் அவை மொழிபெயர்ப்பு நூல்களென்று தோன்றா. தனித்தமிழ் நூல்கள் போலவே அமைந்திருக்கின்றன. முதநூற் கருத்துக்களின் எதிரொலி போலவே தமிழில் பொருளமைந்து கிடந்தவை யுணர்ந்துள்ளேன்.

**கவியோகி சுத்தானந்த பாரதியார் :**

மதுரையில் இவரே (கோபாலகிருஷ்ண ஐயர்) பாரதிக்கு எல்லா உதவியும் செய்த அரிய நண்பர். மதுரைக் கல்லூரியிலும், சங்கத்திலும் திருச்சிக் கல்லூரியிலும் இருந்து இவர் தமிழுக்கு அரிய பணி செய்தார். ஒருதரம் ஜி.சுப்பிரமணிய ஐயர் மதுரைக்கு வந்து புலவர்மணியுடன் அளவளாவியபோது "நல்ல தமிழ் எழுதக்கூடிய உணர்ச்சி பெற்ற வாலிபர் வேண்டும். சுதேசமித்திரனில் எனக்குத் துணை செய்ய ஒருவர் தேவை" என்றார். பாரதியாரை அழைத்து வந்து புலவர் ம.கோ. அறிமுகப்படுத்தினார்.

* தமிழறிஞர் அமரர் ம.கோபாலகிருஷ்ண ஐயர் 19-ம் நூற்றாண்டு மற்றும் இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த மிகச் சிறந்த மேதை. அவருடைய புதல்வர் வழிப் பெயர்த்தி **டாக்டர் உஷா மகாதேவன்** ஆங்கிலப் பேராசிரியையாகப் பணியாற்றி பணி நிறைவு பெற்றவர். "**ம.கோ.களஞ்சியம்**" என்ற நூலைப் பதிப்பித்ததில் அவருடைய சாதனை பிரமிக்கத்தக்கது. அவர் கூறுகிறார்: முன்பு என் எண்ணக்கடலில் எங்கோ ஒரு சிறிய இடம் பிடித்திருந்த என் பாட்டனார் இன்று அங்கே விசுவரூபம் எடுத்துத் தமிழ் மொழிக்குப் பெருந்தொண்டு ஆற்றியவராகவும், மாணவர்கள் நலனுக்கு அரும்பாடுபட்ட நல்லாசானாகவும் நாட்டுப்பற்று மிக்க குடிமகனாகவும் வருங்காலச் சந்ததியரை உருவாக்க அயராது உழைத்த உத்தமராகவும் நீக்கமற நிறைந்திருக்கிறார். அவருடைய படைப்புகளைச் சேகரித்து மறுபதிப்பை வெளிக் கொணர வைத்தது என் பூர்வ ஜன்ம பாக்கியம்.

* குருதேவர் இராமகிருஷ்ண பரமஹம்ஸர் இயக்கம் பற்றிய பல நூல்களை இயற்றிப் புகழ் பெற்றவர், பெரியவர் உயர்திரு. **பெ.சு.மணி** என்ற ஆராய்ச்சியாளர், எழுத்தாளர். **தேசியகவி பாரதியார் ம.கோபாலகிருஷ்ண ஐயரின்** தமிழறிவைப் புகழ்ந்து எழுதியதை "ம.கோ. களஞ்சியம்" நூலில் விவரித்துள்ளார். "வில்லியம் கௌபர்" என்ற ஆங்கிலக் கவிஞரின் "The Task' என்ற கவிதையின் தமிழாக்கம் பற்றி பாரதியார் தமது வார இதழான "இந்தியாவில் ராஜபக்தி" என்று மகுடமிட்டு வியந்து நயந்து பாராட்டியுள்ளார். பாரதியாரின் பாராட்டு; "நமது ஐயர் செய்திருக்கும் மொழிபெயர்ப்பு, என்றே தோன்றாது. இது அதை வாசிப்போர் மனதிற்கே தோன்றும், இச்செய்யுளில் விளங்கும் சொற்பொலிவும், பொருட்சிறப்பும், நடையின் தெளிவும் ஸ்ரீ ஐயரின் தமிழறிவையும் யாப்புத் திறமையையும் நன்கே விளக்குகின்றன."

* தமிழர்கள் அனைவருக்கும் பேராசிரியர் **ம.கோபாலகிருஷ்ண ஐயரின்** வேண்டுகோள். அவருடைய சிந்தனை எல்லாம் செந்தமிழே.

"எனது அன்பார்ந்த சகோதரர்களே ! யான் இவ்வளவு தூரம் தமிழின் அருமை, பெருமை, தளர்ச்சி, வளர்ச்சி, பழமை, கிழமை முதலியனவற்றை எடுத்துக்காட்டியது. அவற்றை அறியாதார் அறியவும், அபிமானம் அற்றார். அபிமானம் உற்றாராகவும், ஆர்வம் உள்ளார். ஆர்வம் மிக்கவராகவும், ஆர்வம் மிக்கார் மன எழுச்சி மேலிட்டு, மீட்டும் தமிழ் வளர்ச்சி செய்யவும் வேண்டியே. இவ்வாறு மேம்படுத்துவோர் தம்மைத் தாமே மேம்படுத்திக் கொண்டோராவார்."

* **ம.கோ.** தமதாசான் சோழவந்தான் **அரசஞ்சண்முகனாரிடம்** அளவற்ற பக்தி கொண்டிருந்தார். அவருடைய எல்லாப் படைப்புகளிலும் "சோழவந்தான் அரசஞ்சண்முகனாரின் மாணாக்கர்" என்பதையே தம்முடைய முதல் அறிமுகமாகக் குறிப்பிட்டிருக்கிறார். ம.கோ. அவர்கள் விவேகோதயம் பத்திரிகையை நடத்தி வந்தபோது, அரசஞ்சண்முகனார் இயற்றிய வள்ளுவர் நேரிமையை மாதந்தோறும் பிரசுரித்து வந்தார் என்பதும், மதுரை மாணவர் செந்தமிழ்ச் சங்கக் கூட்டங்களில் தமது ஆசானை வரவேற்றுக் கௌரவப்படுத்தி வந்தார் என்பதும் ம.கோ.வின் குருபக்திக்குச் சான்றாக அமைந்துள்ளது.

(நன்றி : ம.கோ.வின் வாழ்க்கை வரலாறு, ம.கோ.களஞ்சியம்)

* செயற்கரிய செயல் செய்த செந்தமிழ் இதழ் ஆசிரியர்.

**ம.கோ.,** கந்தசாமிக் கவிராயருடன் வித்யாபானு என்ற இதழின் கூட்டு ஆசிரியராகப் பணிபுரிந்திருக்கிறார். இவருடைய புலமையை வியந்த கந்தசாமிக் கவிராயரின் பாராட்டு :

**"தனித் தமிழ் கவியோ, மொழிபெயர்ப் பினமோ**
**தக்கநல் வசனமோ எல்லாம்**
**இனித்திட வாக்க வல்லவ னிவனே"**

இதேபோல் ம.கோ.வின் நேர்மையையும் பண்பையும விவரிக்கும் வகையில் "உயர்குண நிதியான்", "கயவரை மதியான்", "விதிமுறை வழுவான்" என்றும் விவரித்திருக்கிறார். தமக்கென்று எந்தவிதப் பலனோ அல்லது ஊதியமோ பெறாது விவேகோதயம் பத்திரிகையின் கௌரவ ஆசிரியராகப் பணிபுரிநதுள்ளார் ம.கோ.

* சுவாமி விவகானந்தர் தாமே உருவாக்கிய அமைப்பின் நோக்கங்கள் சமூகத்தின் அடித்தளத்தில் உள்ளவர்களிடம் கல்வியையும் ஆன்மீகத்தையும் கொண்டு செல்வதே மிகவும் முக்கியமான, முதன்மையான மாபெரும் பணி. பெண்ணுரிமை பேணப்பெற வேண்டும் சமயப் பொறையுடன் பிற சமயங்களை ஏற்றுக்கொள். பரம்பரை வேதாந்தத்தின்படி ஆன்மீகமும் உலகியலும் வேறுபட்டவை. இதை சுவாமிகள் உடைத்தெறிந்துவிட்டார். வறுமையிலிருந்து வலிமைக்கு வழிகண்டார். உலகின் மிகப் பழமையான துறவியர் அணிக்கு புதுமைப் பொலிவைத் தந்தார். ஓரிடத்தில் ஒன்றாகச் சேர்ந்து, வாழ்ந்து பணியாற்ற ஏற்பாடு செய்தார்.

**- சுவாமி கமலாத்மனந்தர்**

* பாரதம் முழுதும் பயணம் மேற்கொண்டு, ஆன்மீகமும், உறுதியும் பெறவும், கன்னியாகுமரியில் நடக்கடலில் உள்ள பாறையில் தனித்தவம் மேற்கொள்ளவும், அன்பர்களின் இடைவிடாத கோரிக்கையை ஏற்று அமெரிக்க நாட்டு சிகாகோ நகரில் நடைபெறவிருந்த மாநாட்டில் பங்கேற்றுத் தனது ஆன்மீகக் கடமையை மேற்கொள்ள குருதேவரின் தெய்வீக அருளே விவேகானந்தருக்கு ஓர் உந்து சக்தியாக இருந்துள்ளது.

* இந்தியாவை இந்திய மக்கள் பல காரணங்களால் தனித்தனியாக நினைத்துக் கொண்டிருந்தனர். இந்தியா முழுவதும் ஒரே நாடு ; இந்தியப் பண்பாடு என்பதும் ஒன்றுதான். இந்து மதமும் ஒன்றுதான் என்று நமக்கு உணர்த்தியவர் சுவாமி விவேகானந்தரே.

**- சுவாமி கமலாத்மனந்தர்**

* பேராசிரியர் ம.கோ. அக்பர் காலத்திய பெரும்புலவர் **அபுல்பாசில்** எழுதிய “**அயின் அக்பரி**”யிலிருந்து பன்னிரண்டு பக்கங்களில் தமது தமிழாக்கத்தைச் செய்துள்ளார். சில வரிகள் மட்டும் இங்கே தரப்பெற்றுள்ளன. “சக்கரவர்த்தி எச்சாதியரையும், எம்மதத்தையும் தூஷிப்பது இல்லை. நகைத்துப் பரிகாசம் செய்வது கிடையாது. அவர் காலத்தை வீணாக்குவது இல்லை.

தம்முடைய கடமையைச் சரிவரச் செய்வதில் கருத்தும் கவலையுமாக இருந்து விசேஷப் பயனால் அவர் செய்யும் ஒவ்வொரு செயலும் ஈசுவரார்ப்பணம்"

*** சுவாமி விவேகானந்தரின் சிந்தனை**

சுவாமி விவேகானந்தரின் மேல்நாட்டு சீடர் **சகோதரி நிவேதிதை** சுவாமி விவேகானந்தர் தன்னிடம் கூறிய ஓர் அரசியல் கருத்து, சகோதரி நிவேதிதையின் நினைவிற்கு வரும். அது என்ன? எதிர்பாராத முறையில், ஒருநாள் இந்தியாவிற்கு சுதந்திரம் திடீரென்று வந்துவிடும். அதன் பிறகு அந்தச் சுதந்திரத்தைப் பாதுகாப்பதுதான் மிகவும் கடினமாக இருக்கும். சரியான முறையில் நாடு தனது கடமைகளைச் செய்து வரவேண்டும். இந்தியா தான் பெற்ற சுதந்திரத்தை வைத்து அனுபவிப்பதற்குத் தகுதியுடையதாகத் தன்னை ஆக்கிக்கொள்ள வேண்டும்.

* வேத, உபநிடத காலங்களில் **மைத்ரேயி, கார்க்கி** முதலான பெண்கள் பிரம்ம ஞானத்தைப் பற்றி விவாதிக்கும் தங்கள் திறமையின் காரணத்தால், ரிஷிகளுக்குரிய சிறந்த இடத்தைப் பெற்றிருந்ததை நாம் அறிவோம். இன்றும் அவர்களை அதிகாலையில் நினைவு கூர்கிறோம். வேதங்களில் ஆழ்ந்த புலமையுடைய பல வேதவிற்பன்னர்கள் கூடியிருந்த சபையில் **கார்க்கி** பிரம்மத்தைப் பற்றி விவாதிப்பதற்கு மிகச் சிறந்த யாக்ஞவலகியரையே அழைக்கிறார். அக்காலத்தில் பெண்கள், ஆண்களுக்குச் சமமாக ஆன்மீக வாழ்க்கையில் அனுமதி பெற்றிருந்த செய்தி இன்றுங் கூட புதுமையாகவே கருதப்பெறுகிறது. பெண்களுக்கு இதுகாறும் அந்த உரிமை மறுக்கப்பட்டது ஏன்?

**- சுவாமி விவேகானந்தர்**

* **Lokmanya Bal Gangadhar Tilak** said, Swami Vivekananda was second Sankaracharya. He was the real father of India's regeneration.

* **Maharshi Shri Aurobindo :**
Swami Viveknanda was the hero moulded by the AVATAAR of the age, Shri Ramakrishna Paramahamsa, destined to take the world between his two hands and change it. His advent was 'The first visible sign to the world was that India was awake not only to survive but to conquer.

* **Rabindranath Tagore :**
The Call of Swami Vevekananda roused the inner soul of the youth and prepared them for the utmost dedication and sacrifice. Mahatma Gandhi admitted that his patriotism increased thousand fold by reading Swami Vivekananda.

* **Nethaji Subash Chandra Bose,** the great revolutionary, who contributed most for India's freedom, in his own way, considered Swami Vivekananda as his GURU. Nethaji's thoughts and actions were moulded under the influence of the life and teachings of Swami Vivekananda.

* **Jawaharlal Nehru ;** Swami Vivekananda was full of dynamic energy and passion to push India forward. He came as a tonic to the depressed and demoralised Hindu mind and gave it self-reliance.

* **Chakravarti Rajagopalachari,** the Veteran statesman on whom the prestigious National Award "Bharat Rathna"

conferred first, firmly asserted, "Swami Vivekananda saved Hinduism and saved India. But for him, we would not have gained our freedom. We, therefore our every thing to Swami Vivekananda.

* Swami Vivekananda has forged the chain which is to bind the East and the West together - the golden chain of a common sympathy, of a common humanity and a common and universal religion. Can humanity then, be ever too thankful to Swami Vivekananda? Can his fellow countrymen be ever too proud of him or be ever too grateful to him?

*- THE INDIAN MIRROR - 21.07.1897*

* Religion is the manifestation of divinity already in man. Him I call a Mahatma whose heart bleeds for the poor.

We want vigour in the blood. Strength in the nerves and Muscles of iron and Nerves of steel.

Actions speak louder than words. The power of LOVE is infinitely of greater potency than the power of hatred.

*- Swami Vivekananda*

* Religion without science is blind ; Science without religion is Lame.

*- Albert Einstein*

More things are wrought by prayer than this world dreams.

*- Alfred Tennyson*

A known devil is better than an unknown angel.

*- Mahatma Gandhi*

There is sufficiency in the world for man's need ;
But not for man's greed.

*- Mahatma Gandhi*

None ever got lost on a straight road *- Abraham Lincoln*

# Love of Country

Breathes there the man, with soul so dead,
Who never to himself hath said,
This is my own, my native land!
Where heart hath ne'er within him burned,
As home his footsteps he hath turned
From wandering on a foreign stand?
If such there breathe, go, mark him well;
For him no Minstreal raptures swell;
High though his titles, proud his name,
Boundless his wealth as wish can claim;
Despite those titles, power, and pelf,
The wretch, concentrated all in self,
Living, shall forefeit fair renown,
And doubly dying, shall go down
To the vile dust, from whence he sprung,
Unwept, Unhonoured, and Unsung.

- Sir Walter Scott

## சுதேசாபிமானம்

(இது ஸர். வால்டர் ஸ்காட் என்ற மேற்றிசைப் புலவர் பாடிய 'Lay of the Last Minstreal' என்பதனின்றும் ம.கோ. மொழியாக்கம்.)

"ஈதென் சொந்த ஊர்: ஈதென் பிறப்பிடம்
எனத்தன்னுள்ளே எப்போ தாயினும்
உள்ளுதற் கொண்ணாத் தன்உணர் வில்லா
ஒருவனேனும் உயிருடன் உளனோ?
அந்நிய நாட்டினில் அலைந்துபின் தன்னூர்
நோக்கிக் காலடி போக்கிய காலையில்
உள்ளம் குளிரா ஒருவனம் உளனோ?
இத்தகை ஒருவன் இருப்பனே ஆயின்,
சென்று அவன் யாவன்? என்று நன்குஅறி தி.
உயரிய பட்டம் உடையோ னாயினும்,
பெயரால் அவன்மிகப் பெரியவனாயினும்,
ஆசையே விரும்பும் அளவிலா நிதியம்
படைத்தவனாயினும், பரவசத் துடன்எப்
பாணரும் அவன்புகழ் பாடுதல் ஒழிவர்.
தன்னையே யாவுமா உன்னும் இப்புன்மையோன்
இடம் பொருள் ஏவல் இவைஇருந்தும், தான்
இருக்கையிலே நல் இசையெலாம் இழப்பன்.
இவ்வாறு இருமுறை இறந்து இப்பதடி
புலம்புவா ரற்றும் பூஜ்யத்தை யற்றும்
பாடல் பெறாதும் பண்டுதான் தோன்றிய
இழியபுன் புழுதிக் கிழிந்து செல்குவனே.

* 1. The tree laden with fruits always bends low ; if you wish to be great, be self effacing and humble.
  2. Religion, the great milch cow, has given many kicks but never mind ; it gives a great deal of milk.
  3. Hold your money, merely, as a Custodian for what is God's.

*- Sri Ramakrishna Paramahamsa*

* Be in the world but not of the world like the lotus leaf. Even the least good work done for others awakens the power within, gradually instils into the heart the strength of a LION.

"Ekam sath Vipra Bahuda Vadanti" - Rig Veda - Truth is ONE ; saints interpret differently.

*- Sri Ramakrishna Paramahamsa*

* Every duty is holy. Devotion to duty is the highest form of workship of God. When skill is coupled with unselfish service it becomes worship. This is Karma Yoga. Close your lips ; let your hearts open. Give as the Rose gives perfume because it is its own nature, utterly unconscious of giving.

*- Swami Vivekananda*

* We need to have three things ; the heart to feel ; the brain to conceive and the hand to work. One who know how to obey knows how to command. They alone live who live for others ; the rest are more dead than alive.

*- Swami Vivekanand'a*

* Great Indian luminaries of pre-independence days were unanimous in recognizing Swami Vivekananda's immense influence on national mind, moving into the path of

# The Great Sayings

1. The tree laden with fruits always bends low ; if you wish to be great, be self effacing and humble.

2. Religion, the great milch cow, has given many kicks but never mind ; it gives a great deal of milk.

3. Hold your money, merely, as a Custodian for what is God's.

*- Sri Ramakrishna Paramahamsa*

**Lokmanya Bal Gangadhar Tilak**

Swami Vivekananda was second Sankaracharya. He was the real father of India's regeneration.

**Rabindranath Tagore :**

The Call of Swami Vevekananda roused the inner soul of the youth and prepared them for the utmost dedication and sacrifice. Mahatma Gandhi admitted that his patriotism increased thousand fold by reading Swami Vivekananda.

**Jawaharlal Nehru**

Swami Vivekananda was full of dynamic energy and passion to push India forward. He came as a tonic to the depressed and demoralised Hindu mind and gave it self-reliance.

**Chakravarti Rajagopalachari,**

The Veteran statesman on whom the prestigious National Award "Bharat Rathna" was conferred first, firmly asserted, "Swami Vivekananda saved Hinduism and saved India. But for him, we would not have gained our freedom. We, therefore owe every thing to Swami Vivekananda.

Religion is the manifestation of divinity already in man. Him I call a Mahatma whose heart bleeds for the poor.

We want vigour in the blood. Strength in the nerves and Muscles of iron and Nerves of steel.

Actions speak louder than words. The power of LOVE is infinitely of greater potency than the power of hatred.

*- Swami Vivekananda*

13. Religion without science is blind ; Science without religion is Lame.

*- Albert Einstein*

More things are wrought by prayer than this world dreams.

*- Alfred Tennyson*

A known devil is better than an unknown angel.

*- Mahatma Gandhi*

There is sufficiency in the world for man's need ;
But not for man's greed.

*- Mahatma Gandhi*

None ever got lost on a straight road *- Abraham Lincoln*

இந்நூலின் இப்பகுதி தொகுப்பு
எனது தமயனார்
அமரர் சிவிகுல
**ஆர். வெங்கட்ராமன்**
அவர்களுக்கு
சமர்ப்பணம்

- *R.* வேங்கடகிருஷ்ணன்

# ஆன்மீகப் பாடல்கள்

## விநாயகர் துதி

கணநாதா கணநாதா - கௌரி நந்தன கணநாதா
பக்த ரக்ஷக கணநாதா - பாவன சரிதா கணநாதா
முக்தி ப்ரதாயக கணநாதா - மூலாதார கணநாதா



வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம்
மாமலராள் நோக்குண்டாம்
மேனி நுடங்காது - பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கையான் பாதம்
தப்பாமல் சார்வார் - தமக்கு

## கலைமகள் துதி

### தேசிய கவிஞர் பாரதியார்

வெள்ளைத் தாமரைப் பூவில் இருப்பாள்
வீணை செய்யும் ஒலியில் இருப்பாள்
கொள்ளை யின்பம் குலவு கவிதை
கூறு பாவலர் உள்ளத் திருப்பாள்
உள்ளதாம் பொருள் தேடி யுணர்ந்தே
ஓதும் வேதத்தின் உள்நின் றொளிர்வாள்
கள்ளமற்ற முனிவர்கள் கூறும்
கருணை வாசகத்துட் பொருளாவாள்



வஞ்சமற்ற தொழில் புரிந்துண்டு
வாழும் மாந்தர் குலதெய்வமாவாள்
வெஞ்சமர்க் குயிராகிய கொல்லர்
வித்தை யோர்ந்திடு சிற்பியர் தச்சர்
மிஞ்ச நற்பொருள் வாணிகஞ் செய்வோர்
வீர மன்னர்பின் வேதியர் யாரும்
தஞ்சமென்று வணங்கிடுந் தெய்வம்
தரணி மீதறிவாகிய தெய்வம்

## பரமஹம்ஸ குருவே



ராகம் : ஆரபி தாளம் : ஆதி

பல்லவி :

பரம ஹம்ஸ குருவே - மஹாகாளி
வரம் பெற்ற ஞான தருவே - ராமக்ருஷ்ண
(பரம)

அனுபல்லவி:

பிரம்ம ஞானத்தை சிறு பிள்ளைகளும் அறியப்
பேசி விவேக வொளி வீசிய தேசிகனே (பரம)

சரணம்:

சேரும் அலைகடலாம் கடவுள்
ஆதித்யன்போல் அபேதமென்று ரைத்தாய்
வேறுபாடில்லாத வேதவேதாந்த சக்தி
விமரிசையால் விளங்கும் அமர தீபமே - ஜயஜய
இரை தேடு; இறையையும் தேடு (பரம)

## குருதேவர் துதி

**- கவியோகி சுத்தானந்த பாரதியார்**



கல்லாத கல்வி வளர் கடலேயானான்
கலங்காத காளியருட் செல்வன்; சித்தி
எல்லாமும் வல்லவனாம்; இயற்கையாக
எம்மதமும் சம்மதமாய் ஏற்றுக் கொள்ளும்
சொல்லாளன்; சொற் கடந்த பெருமையாளன்;
சுத்தான்ம நேயத்தின் சுடரேயானோன்
எல்லாமாம் பரம்பொருளை எங்கும் கண்டோன்
இராமகிருஷ்ண பரமஹம்ஸன் இருதாள் போற்றி

குருர் ப்ரம்மா குருர் விஷ்ணு
குருதேவோ மஹேஸ்வரஹ
குரு சாக்ஷாத் பரம்ப்ரம்ம

## ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்
### சரணாகதி அல்லது ப்ரபத்தி



ஆகார சூன்யம் த்ரிகுணைர் விஹீனம்
ஓம்கார வேத்யம் பரமம் பவித்ரம்
ப்ரபஞ்ச காரம் பரிபூர்ண ரூபம்
ஸ்ரீராமக்ருஷ்ணம் சரணம் ப்ரபத்யே !

திலேஷு தைலம் தக்னீவ ஸர்பி;
வ்யாப்தம் ச விச்வேபரமம் நிதானம்
ஸர்வஸ்ய ஸம்ஸ்தம் ஹ்ருதய ப்ரதேசே
ஸ்ரீராமக்ருஷ்ணம் சரணம் ப்ரபத்யே !

தர்மஸ்ய வ்ருத்யை ஸுஜனஸ்ய முக்த்யை
துஷ்ட ப்ரஜாயா: பரிவர்த்தநாய
விச்வேவ தீர்ணம் ஸமதீத மாயம்
ஸ்ரீராமக்ருஷ்ணம் சரணம் ப்ரபத்யே !

தீப்தான நந்தம் பரிபூர்ண போதம்
ஸதாஸி மாதௌ பரிமக்ன சித்தம்
க்ருபாபி பூர்ணம் ப்ரதி தப்த லோகம்
ஸ்ரீராமக்ருஷ்ணம் சரணம் ப்ரபத்யே !

## முருகன் துதி

சுப்ரஹ்மண்யம் சுப்ரஹ்மண்யம்
ஷண்முகநாதா சுப்ரஹ்மண்யம்
சுப்ரஹ்மண்யம் சுப்ரஹ்மண்யம்
ஸ்வாமிநாதா சுப்ரஹ்மண்யம்
சிவ சிவ சிவ சிவ சுப்ரஹ்மண்யம்
ஹர ஹர ஹர ஹர சுப்ரஹ்மண்யம்
குரு சரவண பவ சுப்ரஹ்மண்யம்
குஹ சரவணபவ சுப்ரஹ்மண்யம்



## முருகன் பாட்டு

**- தேசிய கவிஞர் பாரதியார்**

ராகம் : நாட்டைக்குறிஞ்சி தாளம் : ஆதி

பல்லவி : முருகா! முருகா! முருகா!

சரணங்கள் : வருவாய் மயில் மீதினிலே
வடிவேலுடனே வருவாய்
தருவாய் நலமும் தகவும் புகழும்
தவமும் திறமும் தனமும் கனமும் (முருகா)

அடியார் பலர்இங் குளரே
அவரை விடுவித்தருள்வாய்
முடியா மறையின் முடிவே அசுரர்
முடிவே கருதும் வடிவேலவனே (முருகா)

சுருதிப் பொருளே வருக
துணிவே கனலே வருக
கருதிக் கருதிக் கவலைப் படுவார்
கவலைக் கடலைக் கடியும் வடிவேல் (முருகா)

அறிவாகிய கோயிலிலே
அருளாகிய தாய் மடிமேல்
பொறிவே லுடனே வளர்வாய் அடியார்
புதுவாழ் வுறவே புவி மாதருள்வாய் (முருகா)

குருவே பரமன் மகனே
குகையில் வளருங் கனலே
தருவாய் தொழிலும் பயனும் அமரர்
சமராதிபனே சரணம் சரணம் (முருகா)

## சிவன் துதி



என்னப்பனல்லவா எந்தாயுமல்லவா
பொன்னப்பனல்லவா பொன்னம்பலத்தவா
ஆடிய பாதமே அம்பலவாணரே
சிதம்பரத்தில் வாழும் சிவகாமி நேசனே
ஆலால சுந்தரம் அற்புத சுந்தரம்
கல்யாண சுந்தரம் கடம்பவன சுந்தரம் (இருமுறை)
காமாக்ஷி சுந்தரம் மீனாக்ஷி சுந்தரம் (என்னப்)

## இறைவா இறைவா
### - தேசிய கவிஞர் பாரதியார்

எத்தனை கோடி இன்பம் வைத்தாய் - எங்கள்
இறைவா இறைவா இறைவா (ஓ எத்தனை)

சித்தினை அசித்துடன் இணைத்தாய் - அங்கு
சேரும் ஐம் பூதத்து வியனுல கமைத்தாய்
அத்தனை உலகமும் வர்ணக் களஞ்சியமாகப்
பல பல நல்லழகுகள் சமைத்தாய் (ஓ எத்தனை)

முக்தியென்றொரு நிலை சமைத்தாய் - அங்கு
முழுதினையும் உணரும் உணர்வமைத்தாய்
பக்தியென்றொரு நிலை வகுத்தாய் - எங்கள்
பரமா! பரமா! பரமா! (ஓ எத்தனை)

## அபிராமி அந்தாதி

தனந் தரும் கல்வி தரும் ஒரு நாளுந்
தளர்வறியா
மனந்தரும் தெய்வவடிவுந் தரும் நெஞ்சில்
வஞ்சமில்லா
இனந்தரும் நல்லனவெல்லாந் தரும் அன்பர்
என்பவர்க்கே
கனந்தரும் பூங்குழலாள் அபிராமி
கடைக்கண்களே





## ஸ்ரீ ராஜராஜேஸ்வரி

**- அருட்கவி கு.செ. இராமசாமி**

ஓம் எனும் மந்திரத் துட்பொருளாகின்ற
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி
ஊழிதொறும் ஊழிதொறும் உயர்அறம் காக்கின்ற
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி
நாமமும் உருவமும் பலவாகி உலகாளும்
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி
ஞானமும் கிரியையும இச்சையும் தானான ஸ்ரீ ராஜராஜேஸ்வரி
க்ஷேமமும் இன்பமும் சித்தியும் உதவிடும் ஸ்ரீ ராஜராஜேஸ்வரி
ஸ்ரீசக்ர நிலையத்தில் சிவசக்தி வடிவான ஸ்ரீ ராஜராஜேஸ்வரி
யாமும் எம் கல்வியும் யாவும் உன்அடைக்கலம்
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி
இறைவி எனை ஆண்டருளும் ஸ்ரீ ராஜராஜேஸ்வரி
இமயமலை வாழும் உமையே.

## அம்மை சக்தி துதி

**- தேசிய கவிஞர் பாரதியார்**



1. நெஞ்சுக்கு நீதியும் தோளுக்கு வாளும்
நிறைந்த சுடர்மணிப்பூண்
பஞ்சுக்கு நேர்பல துன்பங்களாம், இவள்
பார்வைக்கு நேர் பெருந்தீ
வஞ்சனையின்றிப் பகையின்றிச் சூதின்றி
வையகமாந்தரெல்லாம்
தஞ்சமென்றே உரைப்பீர் அவள்பேர் சக்தி
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்

2. நல்லதுந் தீயதுஞ் செய்திடும் சக்தி
நலத்தை நமக்கிழைப்பாள்;
அல்லது நீங்கும் என்றேயுல கேழும்
அறைந் திடுவாய் முரசே
சொல்லத் தகுந்த பொருளன்று காண்
இங்கு சொல்லு மவர்தனையே
அல்லல் கெடுத்தம ரர்க்கிணை யாக்கிடும் சக்தி
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்

நம்புவதே வழியென்ற மறை தன்னை
நாமின்று நம்பி விட்டோம்
கும்பிட்டெந் நேரமும் “சக்தி” என்றால் உனைக்
கும்பிடுவேன் மனமே
அம்புக்கும் தீக்கும் விடத்துக்கும் நோவுக்கும்
அச்சமில்லாதபடி
உம்பர்க்கும் இம்பர்க்கும் வாழ்வு தரும் பதம்
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்



## ஸ்ரீ ராமர் துதி

**- கவியோகி சுத்தானந்த பாரதியார்**

ஸ்ரீராம் ஜயராம் ஜய ஜயராம்
ஸ்ரீராம் ஜயராம் ஜய ஜயராம்
**நாராயண ஓம் நம சிவாய** வெனும்
சாரமான நல்ல தாரக மந்திரம் (ஸ்ரீராம்)
பக்தி வைராக்யமும் பரந்த சமரஸமும்
சுத்த சச்சிதானந்த முக்தியும் அளிப்பது (ஸ்ரீராம்)

## ரகுபதி ராகவ

மஹாத்மா காந்திஜியின் தினசரி வழிபாட்டில் பாடப்பெற்ற பாடல். 30.01.1948 மாலை 5.00 மணியளவில் வழக்கம் போல் மாலை பிரார்த்தனைக்கு வந்த மஹாத்மாவை நாதுராம் கோட்ஸே தனது கைத்துப்பாக்கியால் சுட்டான். மரண நேரத்திலும் ‘**ஹே ராம் ஹே ராம்**’ என்று கூறியபடியே மஹாத்மா இறைவனடி சேர்ந்தார்.



ரகுபதி ராகவ ராஜாராம்
பதீத பாவன ஸீதாராம்
ஈச்வர் அல்லா தேரே நாம்
ஸப்கோ ஸந்மதி தே பகவான்
பஜமன ப்யாரே ராமஹரி
பஜமன ப்யாரே க்ருஷ்ணஹரி

ராம ராம ஜய ராஜாராம்
ராம ராம ஜய ஸீதா ராம்

ராம ராம ராம ராம ராம ராம ராம்!
ராம ராம ராம ஸீதா ராம ராம ராம்
ஜே ஜே ராம் கோவிந்த ஹரி ஹரி
ஜே ஜே ராம் முகுந்த மாதவ
ராம ராம ராம ராம ராம ராம ராம்
ராம ராம ராம ஸீதா ராம ராம ராம்

**கம்ப ராமாயணத்தில் உள்ள மிகச் சிறந்த பாடல்களிலே ஒன்று**

ஸ்ரீராமர் கோசலை மைந்தர், பரதர் கைகேயி புதல்வன் ; இலக்குவனும் சத்ருகனனும் சுமித்ரையின் சேய்கள் - எனினும் நால்வரும் ஒரே தந்தை மன்னர் தசரதரின் புதல்வர்கள். சகோதர மனப்பான்மை கொண்டதில் வியப்பில்லை. ஆனால் குகன் படகோட்டி ; சுக்ரீவன் வானரன் ; விபீடனன் அரக்கர் கோன் ;
இம் மூவரையும், பேதம் காணாது சகோதரர்களாகவே உறவு கொள்கிறார் இராமச்சந்திரர். மேலும் விபீடணனை விளிக்கும்போது...

அகனமர் காதல் ஐய நின்னொடும் எழுவரானோம்
புகலருங் கானந் தந்து புதல்வராற் **பொலிந்தா னுந்தை**

என்று கூறி மூவர்க்கும் தசரதரையே தந்தையாக பாவிக்கும் ஸ்ரீராமர் ‘சகோதரத்வத்தின்’ விளக்கமாகவே ஜ்வலிக்கிறார்.

குகனொடும் ஐவரானோம். முன்பு; பின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவரானேன்; எம் முழை யன்பின் வந்த
அகனமர் காதல் ஐய நின்னொடும் எழுவரானோம்
புகலருங் கானந் தந்து புதல்வராற் பொலிந்தா னுந்தை

மாணவச் செல்வங்களே!
கம்பரின் இப்பாடல் உங்கள் இதயங்களில் நிலைத்து

## ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா



ஹரி ஹரி ஹரி ஹரி ஹரி ஹரி போல்
ஹரி ஹரி ஹரி ஹரி ஹரி ஹரி போல்
கேசவ மாதவ கோவிந்த போல்
கேசவ மாதவ கோவிந்த போல்
கேசவா மாதவா - கோவிந்த கோபால.

**தேசியகவி பாரதியார்**

ராகம் : யதுகுல காம்போதி                    தாளம் : ஆதி

காயிலே புளிப்பதென்னே கண்ணபெருமானே - நீ
கனியிலே இனிப்பதென்னே கண்ணபெருமானே - நீ
நோயிலே படுப்பதென்னே கண்ணபெருமானே - நீ
நோன்பிலே உயிர்ப்பதென்னே கண்ணபெருமானே - நீ

காற்றிலே குளிர்ந்தென்னே கண்ணபெருமானே - நீ
கனலிலே சுடுவதென்னே கண்ணபெருமானே - நீ
சேற்றிலே குழம்பலென்னே கண்ணபெருமானே - நீ
திக்கிலே தெளிந்ததென்னே கண்ணபெருமானே - நீ

ஏற்றிநின்னைத் தொழுவதென்னே கண்ணபெருமானே - நீ
எளியர் தம்மைக் காப்பதென்னே கண்ணபெருமானே - நீ
போற்றினோரைக் காப்பதென்னே கண்ணபெருமானே - நீ
பொய்யர் தம்மை மாய்ப்பதென்னே கண்ணபெருமானே - நீ
போற்றி! போற்றி! போற்றி! போற்றி!
கண்ணபெருமானே! நின்
பொன்னடி போற்றி நின்றேன்
கண்ணபெருமானே

## நந்தலாலா

**தேசியகவி பாரதியார்**

ராகம் : யதுகுல காம்போதி                    தாளம் : ஆதி

காக்கைச் சிறகினிலே நந்தலாலா - நின்றன்
கரிய நிறந் தோன்றுதையே நந்தலாலா
பார்க்கும் மரங்களெல்லாம் நந்தலாலா - நின்றன்
பச்சை நிறந் தோன்றுதையே நந்தலாலா

கேட்குமொழியிலெல்லாம் நந்தலாலா - நின்றன்
கீதம் இசைக்குதடா நந்தலாலா
தீக்குள் விரலை வைத்தால் நந்தலாலா - நின்னைத்
தீண்டும் இன்பம் தோன்றுதடா நந்தலாலா

தேசிய கவிஞர் **பாரதியாரின் கிறித்துவ சமயப் பாடல்**



உண்மை என்ற சிலுவையிற் கட்டி
உணர்வை ஆணித் தவம் கொண்டடித்தார்
வண்மைப் பேருயிர் யேசுகிறிஸ்து
வான மேனியில் அங்கு விளங்கும்
பெண்மைகாண் மரியா மக்தலேநா
பேணும் நல்லறம் யேசுகிறிஸ்து
நுண்மை கொண்ட பொருளிது கண்டீர்
நொடியிலிருந்து பயின்றிடலாகும்.

## LEAD KINDLY LIGHT

***- Cardinal Newman***

Lead kindly Light, amid the encircling gloom
Lead Thou me on
The night is dark and
I am far from home
Lead Thou me on



Keep Thou my feet
I do not ask to see
The distant scene
One step enough for me

Arise ! Awake ! Stop not
Till the goal is reached

## தேசிய கவி பாரதியாரின் இஸ்லாம் சமயம் பாடல்

### அல்லா



பல்லவி : அல்லா அல்லா அல்லா;

சரணங்கள் : பல்லாயிரம் பல்லாயிரம்
கோடி கோடியண்டங்கள்
எல்லாத் திசையிலுமோர்
எல்லை இல்லா வெளி வானிலே !
நில்லாது சுழன்றோட !
நியமஞ் செய்தருள் நாயகன்
சொல்லாலும் மனத்தாலும்
தொடரொணாத பெருஞ்சோதி
(அல்லா அல்லா அல்லா)



கல்லாதவராயினும் உண்மை சொல்லாதவராயினும் பொல்லாதவராயினும் தவமில்லாதவராயினும் நல்லாருரை நீதியின்படி நில்லாதவராயினும் எல்லாரும் வந்தேத்து மளவில் யமபயம் – கெடச்செய்பவன்

(அல்லா அல்லா அல்லா)

### உலகப் பொது பிரார்த்தனை

அல்லா தேரோ நாம்
ஈச்வர் தேரோ நாம்
ஏசு பிதா குருநானக் தும்ஹோ
ஸப்கா மாலிக் ஏக் ஹை – ராம்



(அல்லா தேரோ நாம்)

நமசிவாய ஐந்தெழுத்து
ALLAH ஐந்தெழுத்து
JESUS ஐந்தெழுத்து
BUDHA ஐந்தெழுத்து
SIKHS ஐந்தெழுத்து

O, Hidden Life vibrant in every atom;
O, Hidden Light shining in every creature.
O, Hidden Love embracing all in oneness;
May each who feels himself (herself)
ONE with Thee
Know he (she) is one with every other

**ஓம் தத்ஸத் ஸ்ரீ நாராயண நீ**
**புருஷோத்தம குரு நீ**
**சித்த புத்த நீ ஸ்கந்த விநாயக**
**ஸவிதா பாவக நீ**
**ப்ரஹ்ம மஜ்த நீ யஹோவா சக்தி நீ**
**ஏசு பிதா ப்ரபு நீ**
**ருத்ர விஷ்ணு நீ ராம கிருஷ்ண நீ**
**ரஹீம் தாவோ நீ! வாசுதேவ கோ விச்வ ரூப நீ**
**சிதானந்த ஹரி நீ! அத்விதேய நீ அகால நிர்பய**
**ஆத்ம லிங்க சிவ நீ!**

## அனுமன் துதி

**- கம்பர்**



அஞ்சிலே ஒன்று பெற்றான்
அஞ்சிலே ஒன்றைத் தாவி
அஞ்சிலே ஒன்றாக
ஆரியர்க்காக ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற
அணங்கைக் கண்டு
அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்றை வைத்தான்
அவன் நம்மை அளித்துக் காப்பான்

### வேத வாக்யம்

**அஸதோ மா ஸத் கமய**
**தமஸோ மா ஜ்யோதிர் கமய**
**ம்ருத்யோர் மா அம்ருதம் கமய**
**ஓம் சாந்தி! சாந்தி! சாந்தி!**

### மங்களம்

சங்கராய சங்கராய சங்கராய மங்களம்
சங்கரி மனோஹராய சாஸ்வதாய மங்களம்
கஜானனான மங்களம் ஷடாணனாய மங்களம்
குருவராய மங்களம் குருதேவாய மங்களம்
ஸீதா ராம மங்களம் ராதாக்ருஷ்ண மங்களம்
ஸ்ரீராமக்ருஷ்ண மங்களம் ஸ்ரீ சாரதாய மங்களம்
ஸ்ரீ விவேகானந்தாய மங்களம்
ஸ்ரீ ஆஞ்சநேய மங்களம்

(நைவேத்யம் படைத்து வழிபட்டு, சாம்பிராணி தூபம் காட்டவும். பின்னர் கற்பூர ஹாரதி காட்டவும்)

(கற்பூரம் - ஜீவாத்மா; தீபம் - பரமாத்மா; கற்பூர தீபம் காட்டும்போது அனைவர் உள்ளத்திலும் ஓர் ஆன்மீக சிந்தனை நிறைந்து சிறக்க வேண்டும். ஜோதியான பரமாத்மாவோடு கற்பூரமாகிய ஜீவாத்மா ஒன்றிக் கலத்தலே இதன் தத்துவம்.)

**Nethaji Subash Chandra Bose** the great revolutionary, who contributed most for India's freedom, in his own way, considered Swami Vivekananda as his GURU. Nethaji's thoughts and actions were moulded under the influence of the life and teachings of Swami Vivekananda.

## தைத்திய உபநிடதம்

ஸஹநா வவது ஸஹநௌ புனத்துக்
ஸஹ வீர்யம் கரவா வஹைர்
தேஜஸ்வி நாவதீத மஸ்து
மாவித் விஷா வஹைர்
ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி :

## அப்பர் தேவாரம்

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசுவண்டறைப் பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே

## ஆண்டாள் திருப்பாவை



சிற்றஞ் சிறுகாலே வந்துன்னை சேவித்துன்
பொற்றாமரை யடியே போற்றும் பொருள் கேளாய்
பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்து நீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமற் போகாது
இறைப் பற்றை கொள்வான் அன்றுகாண் கோவிந்தா
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உந்தன்னோடு
உற்றோமே யாகில் உமக்கே நாம் ஆட்செய்வோம்
மற்றை நம் காமங்கள் மாற்றேவோர் எம்பாவாய்

## திருவருட்பா

எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும்
தம்முயிர்போல் எண்ணியுள்ளே
ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார் யாவர்
அவர் உளந்தான் சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம் புரியும்
இடமென நான் தேர்ந்தேன் அந்த
வித்தகர் தம் அடிக்கோல் புரிந்திடயென்
சிந்தை மிக விழைந்ததாலோ

## திருவள்ளுவர் திருக்குறள்

அகர முதல எழுத் தெல்லாம்
ஆதிபகவன் முதற்றே உலகு

கற்றதனாலாய பயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழா அர்ளனின்

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார்

(இம் மூன்று குறட்பாக்களையும் ராகத்துடன் இறைவணக்கமாகப் பாடலாம்.)

## தமிழ் நீடு வாழ்க

**- கவியோகி.சுத்தானந்தபாரதியார்**

செய்யொத்த பயிற் போலச் செந்தமிழும்
செழும் பொருளும் சேர்ந்தசெல்வம்
மையொத்த மனவிருளை மாற்றி யொளிர்
**மணிவிளக்கு** : மாந்தரெல்லாம்
வைத்தில் வாழ்வாங்கு வாழ்ந்தமர
வாழ்வெய்த வழி நடத்தும்
**கையொத்த** நற்றுணைவன் வள்ளுவனார்
திருக்குறளெம் கண்களன்றோ.

காதொளிருங் **குண்டல**மும் கைக்கு**வளை
யாபதி**யுங் கருணை மார்பின்
மீதொளிர் **சிந்தாமணி**யும் மெல்லிடையில்
**மேகலை**யுஞ் **சிலம்பாரின்**பப்
போதொளிர் பூந்தாமரையும் பொன்முடி
**சூளாமணி**யும் பொலியச் சூடி
நீதியொளிற் செங்கோலாய்த் திருக்குறளை
தாங்கு தமிழ் நீடுவாழ்க.

## எல்லாரும் வாருங்கள்

**-கவியோகி சுத்தானந்த பாரதியார்**

எல்லாரும் வாருங்கள் எல்லாரும் சேருங்கள்
ஈசனை அனமபு செய்வோம்
எல்லாரும் பாடுங்கள் எல்லாரும் பாடுங்கள்
இன்பமே நமது தெய்வம்

அல்லா பரமபிதா ஹரிஹர ப்ரம்மாமென்றும்
அம்மையப்பா வென்றும்
சொல்லி வணங்குவோம் சொல்லரியாச் சுகத்தை
ஜோதி வழியில் நின்றே

ஜாதி மத பேதம் சாராத சுத்தனவன்
சச்சிதானந்தப் பெருமாள்
ஆதியந்தம் இல்லாதன் ஆர்வனழைத்தால்
அன்பருள்ளே வருவான்

இல்லை என்பாருள்ளும் இருக்கிறேன் என்றவர்
இதயத்தில் வீற்றிருப்பான்
எல்லையில்லா உலகம் எங்கும் உயிர்க் குயிராய்
இன்னருள் பூத்திடுவான்

## திருவருட்பா

**கவியோகி வள்ளலார்**

விள்ளரிய சுகானந்த வெள்ளந் தன்னில்
விளைந்த பரங்கனியே என்விருப்பை நாளும்
கொள்ளை கொளும் அருட்சோதிக் குன்றே தன்னைக்
கொடுத்தடியார் குறைதீர்க்கும் துரைநீயே நாளும்
உள்ளத்தில் ஓங்காரச் சிலம்பொலிக்க
ஓங்கு நடம் புரிகின்ற சிவமே யுன்னைத்
தெள்ளினிய செந்தமிழால் வழிபட்டுய்யச்
சிறியேனுக் கருள் புரிவாய் பெரிய தேவே

## கவியோகி சுத்தானந்த பாரதியார் பாடல்கள்

ஒற்றுமை முரசொலித்து முன்செல்வோம்
உலகமெலாம் அன்புகொண்டு வெல்லுவோம்
இந்து முஸ்லிம் கிறிஸ்து பௌத்தர்
இதயம் ஒன்றி இனமும் ஒன்றி
பந்தமற்ற ஆன்ம நேயப்
படையைப் போல நடைசிறந்தே
சமரச முரசொலித்து முன் செல்வோம்
ஜாதியற்ற ஜோதி பற்றி வாழ்வோம்.

மண்ணகத்தில் விண்ணகத்தை
மானிடத்தில் அமர வாழ்வை
கண்ணகத்தில் கடவுளன்பைக்
கண்டு கண்டு கருணை கொண்டே
ஆனந்த முரசொலித்து முன்செல்வோம்
அருளமைதி ஆற்றல் ஓங்கி வாழுவோம்.

வேத மாமுனிவர் வாக்கும்
விரிமத முதல்வர் வாக்கும்
ஆதிசங்கரின் வாக்கும்
அப்பர் மாணிக்க வாக்கும்
கீதை குரானின் வாக்கும்
கிறித்துவின் பைபிள் வாக்கும்
ஓதிய பயன்களெல்லாம்
ஒருமை அன்புரிமை நெஞ்சே



இந்நூலின் இப்பகுதி தொகுப்பு

ராஜரிஷி மாமன்னர்

***பாஸ்கர சேதுபதி***

அவர்களின் பெயரர்

என்னிடம் 40-ஆண்டுகளாக

பேரன்பு கொண்டிருந்த

மாமன்னர் சிங்கம்பட்டி

***டி.என்.எஸ்.***

***முருகதாஸ் தீர்த்தபதி ராஜா***

அவர்களுக்கு எனது அன்பு

கலந்த சமர்ப்பணம்

- ***R.*** வேங்கடகிருஷ்ணன்

## சுவாமி விவேகானந்தர் - மன்னர் பாஸ்கர சேதுபதி பற்றிய செய்திகளுக்கு முன்பு

அன்புள்ள மாணவச் செல்வங்களே,

இச்சிறுநூல் குறிப்பாக உங்களுடைய நன்மையைக் கருத்திற் கொண்டே தொகுக்கப்பெற்றுள்ளது. சுவாமி விவேகானந்தர் தோற்றம் மிடுக்கானது. சிறு குழந்தைகள் முதல் முதியோர்கள் வரை அனைவரையும் ஈர்க்கக்கூடியது. அதேபோல் சுவாமிகளின் ஆங்கிலப் பேச்சும், எழுத்தும் மிடுக்காகவே உள்ளன.

அமெரிக்க நாட்டின் சிகாகோ நகரில் 1893ல் நடைபெற்ற சர்வ சமய மாநாட்டில் சுவாமி விவேகானந்தர் பங்கேற்றுச் சிறப்பித்தார்; சிறப்பு பெற்றார்; உலகப் புகழ் பெற்றார்.

மாணவர்களாக இருந்தபோதே குடும்பத்தில் எங்களையும் பிற நண்பர்களையும் எனது தந்தையார் அமரர் **ஜே.ரெங்கசாமி அய்யர்** தினமும் சில தமிழ் ஆங்கில நூல்களை இரவு உறங்கச் செல்வதற்கு முன் (இரவு 8.30 முதல் 9.15 முடிய) படிக்கப்பெறத் திட்டமிடுவது உண்டு. சுவாமி விவேகானந்தரின் ஆங்கிலச் சொற்பொழிவுகளடங்கிய "**கொழும்பு முதல் அல்மோரா வரை**" என்ற நூல் B.R.**ராஜம் அய்யரின்** "Rambles in Vedanta", ஷேக்ஸ்பியர் நாடகங்களில் குறிப்பிட்ட சில பகுதிகள், **ஆலிவர் கோல்டு ஸ்மித்** நூல்கள், திருப்பாவை, பாரதியார் இயற்றிய சுதேச கீதங்கள், Invitations of Christ சுத்தானந்த பாரதியார் இயற்றிய சில நூல்கள் குறிப்பிடத்தக்கவை. இத்திட்டத்தில் இரண்டு நோக்கங்கள் இருந்தன ; தமிழ் ஆங்கில மொழிகளில் புலமை பெறப் பயிற்சி. இந்நூல்களைப் படிப்பதன் மூலம் மாணவர்கள் பெறும் பண்பாடுப் பயிற்சி. இவ்விரு பயிற்சிகளையும் ஒவ்வொரு தலைமுறை மாணவர்கள் பெற வேண்டும்.

பெரியோர்கள் குறிப்பிடும் தமிழ் இலக்கியங்கள், ஆங்கில மொழியில் சில நூல்கள் படிப்பதன் மூலம் உங்களுடைய ஆளுமையை சிறக்கச் செய்யுங்கள். இந்த சிறு வெளியீட்டைப்

1893ல் சிகாகோவில் நடைபெறவிருந்த சர்வசமய மாநாட்டில் சுவாமிகள் பங்கேற்க வேண்டும் என்று முதன் முதலில் கோரிக்கை விடுத்தவர் இராமநாதபுரம் சீமை (சேது சீமை) **மன்னர் மேதகு இராஜராஜேஸ்வர சேதுபதி என்ற பாஸ்கர சேதுபதி.** சென்னை அன்பர்களும் இதே கோரிக்கையை வற்புறுத்தினர். குருதேவர் அருளாசியும், அன்னை ஸ்ரீ சாரதாமணி தேவி அனுமதியுடன் ஆசியையும் பெற்று சிகாகோ மாநாட்டில் பங்கேற்றார்.

சுவாமி விவேகானந்தர் பாரத நாட்டிற்கு ஆற்றிய மகத்தான சேவையையும், மன்னர் சேதுபதியின் ஆன்மீக ஈடுபாடு. உற்சாகமான சேவை மற்றும் உதவியையும் இந்திய மக்கள், குறிப்பாகத் தமிழர்கள் என்றென்றும் இதயங்கனிந்த நன்றியுடன் பாராட்டிப் போற்றவேண்டும். வரலாறு படைத்த ஆன்றோர்களையும் சான்றோர்களையும் நினைவில் போற்றி கௌரவிக்கவேண்டும். இது உங்கள் கடமை.

சிவகங்கை
18.02.2021

ஆர்.வேங்கடகிருஷ்ணன்
தாளாளர் - தலைவர்,
ஸ்ரீ ராமகிருஷ்ணா தொடக்கப்பள்ளி
சிவகங்கை - 630 561

**Maharshi Shri Aurobindo :**

Swami Viveknanda was the hero moulded by the AVATAAR of the age, Shri Ramakrishna Paramahamsa, destined to take the world between his two hands and change it. His advent was 'The first visible sign to the world was that India was awake not only to survive but to conquer.



**ராஜரிஷி இராமநாதபுரம் மன்னர்**
**மேதகு ஸ்ரீ ராஜராஜேஸ்வர சேதுபதி என்ற**
**பாஸ்கர சேதுபதி**

## தேசபக்த ஞானி சுவாமி விவேகானந்தர் ராஜரிஷி இராமநாதபுரம் மன்னர் மேதகு ஸ்ரீ ராஜராஜேஸ்வர சேதுபதி என்ற பாஸ்கர சேதுபதி பாரத நாட்டின் ஆன்மீக எழுச்சிக்கு ஆற்றிய அரும்பெருந்தொண்டு

**குருதேவர் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர்** இந்து சமயத்தின் பரிபூர்ண பிரதிநிதியாகவே போற்றப்பெற்றவர். அத்துடன் பிற சமயங்களின் கொள்கைகளையும், அந்தந்த சமயங்களின் வழிமுறையையும் பின்பற்றி சர்வசமய அனுபவங் கண்ட முதல் ஆசார்ய புருஷர். ஓர் ஆன்மீக பெட்டகமாகச் சிறந்து பாரத நாட்டின் ஆன்மீக மறுமலர்ச்சிக்கும் சமய ஒற்றுமைக்கும் வழிகாட்டியவர்.

**சுவாமி விவேகானந்தர்** குருதேவரின் சீடர்களில் முதன்மையானவர். அவர் உலகில் ஆற்றவேண்டிய ஆன்மீகப் பணிகள் பற்றி குருதேவர் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் மேற்கொண்ட செயல்முறைகள் அனைவருக்கும் ஆச்சரியத்தையே தந்தன.

தமது சீடர்களில் மிகவும் துடிப்புடன் செயலாற்றும் தகுதி, சிங்கம் போன்ற இளைஞன் நரேந்திரனிடம் மட்டும் இருப்பதை குருதேவர் கண்டார். பாரத நாட்டின் ஆன்மீகத் தூதராக, நாட்டின் ஆன்மீகச் செல்வத்தை உலகெங்கிலும் பகிர்ந்தளிக்கும் வல்லவராக செயலாற்ற, தாம் நினைத்த கடமையை நிறைவேற்றவுள்ள ஓர் அற்புத வீரனாக பொருத்தமான பிரதிநிதியாக நரேந்திரனே இருக்க முடியும் என்று குருதேவரின் ஆன்மீக உள்ளம் உணர்ந்தது.

மிகச் சிறந்த ஓர் ஆன்மீக இயக்கத்தின் செயல்வீரராக நரேந்திரன் என்ற சுவாமி விவேகானந்தரை உருவாக்கவே தமது மஹா சமாதிக்கு முன்னரே தமது ஆன்மீகக் கருவூலத்தை நரேந்திரருக்கு மாற்றியருளினார். இவ்வாறே தூய அன்னையாக ஸ்ரீ சாரதாமணி தேவியையும் உருவாக்கினார்.

அனைவரிடமும் சிங்கம் போன்று காணப்பெற்ற சுவாமி விவேகானந்தர் தமது குருதேவரிடம் மட்டும் ஓர் ஆட்டுக்குட்டி போன்றே இருந்தார்; ஸ்ரீ சாரதாமணி தேவிக்கு ஒரு புதல்வனாகவே இருந்தார்.

குருதேவர் மஹாசமாதிக்குப் பிறகு சுவாமி விவேகானந்தர் ஒரு பரிவ்ராஜகராகப் பாரதம் முழுதும் பயணம் மேற்கொண்டார். ஆன்மீக அனுபவங்கள் பல பெற்றார். ராமேஸ்வரம் செல்லும் வழியில் மதுரைக்கு வந்தார். இராமநாதபுரம் மன்னர் பாஸ்கர சேதுபதி ஓர் ஆன்மீகச் செல்வர். மதுரை சென்று சுவாமிகளைத் தரிசித்தார். சுவாமி விவேகானந்தரின் ஞானத்தையும் மேதாவிலாசத்தையும் ஆன்மீக ஈடுபாட்டையும் கணடு வியப்புற்ற மன்னர் ஒரு வேண்டுகோள் விடுத்தார்.

1893ல் அமெரிக்காவின் சிகாகோ நகரில் நடைபெறவுள்ள சர்வ சமய மாநாட்டில் சுவாமிகள் பங்கேற்க வேண்டும் என்றும், பாரதத்தின் ஆன்மீகச் செல்வத்தை மேற்கு நாடுகளில் பரப்பவும், இந்தியாவின் எதிர்காலப் பணிகளுக்கு வித்திட, சிகாகோ மாநாடு ஒரு நல்ல வாய்ப்பாக அமையும் என்றும், சுவாமிகளின் அமெரிக்கப் பயணத்திற்கு தன்னாலான அனைத்து உதவிகளையும் தாம் செய்வதாகவும் வாக்களித்தார். கன்னியாகுமரி செல்வதிலேயே சுவாமிகள் குறியாயிருந்தார். மன்னருக்கு எந்தவித பதிலும் கூறயியலாத நிலையில் சுவாமி விவேகானந்தர் இருந்தார்.

சுவாமி விவேகானந்தர் கன்னியாகுமரி சென்றார். நடுக்கடலில் இருந்த ஒரு பாறைக்கு நீந்திச் சென்றார். பாறை நடுவே அமர்ந்து ஆழ்ந்த தவமியற்றினார். ஏதோ ஓர் உத்வேகம் அவரது உள்ளத்தில் எழுந்தது. சென்னைக்குச் சென்றார். சுவாமிகளின் மிகச் சிறந்த அன்பர் திரு. **M.C.அளசிங்கப் பெருமாள்** மற்றும் பல அன்பர்கள் சுவாமிகளை வரவேற்று **'ஐஸ் ஹௌஸ்'** என்று வழங்கப்பெற்ற ஒரு பெரிய கட்டிடத்தில் தங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்தனர் (இன்று அதன் பெயர் விவேகானந்தர் இல்லம்). சென்னை அன்பர்களும் மன்னர் சேதுபதியின் கோரிக்கையைப் போலவே தங்களுடைய விருப்பத்தைத் தெரிவித்தனர் ; வலியுறுத்தினர்.

சுவாமிகள் 'ஐஸ் ஹௌஸ்' மாடியிலிருந்து கிழக்கே பரந்து காணப்பெற்ற வங்கப் பெருங்கடலைப் பார்த்தார். சுவாமி விவேகானந்தரின் கண்களுக்கு கடல் நடுவே குருதேவர் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸரின் திருவுருவமும், தமது வலது கையை மேற்கு திசையை நோக்கி அசைத்த காட்சியும் பரவசப்படுத்தின. தமது சிகாகோ பயணத்திற்கு குருதேவரின் ஆசியாகவும் அனுமதியாகவும் கருதினார். அன்னை ஸ்ரீசாரதாமணி தேவியின் அனுமதியும் ஆசியும் கோரிப் பெற்றார்.

சென்னை அன்பர்களுக்கு தமது சிகாகோ பயணத்திற்கான ஒப்புதலை சுவாமிகள் அளித்தார். மன்னர் சேதுபதியும் செய்தி அறிந்து மகிழ்ந்தார். மன்னரும் சென்னை அளசிங்கப் பெருமாள் போன்ற அன்பர்களும் சுவாமிகளின் அமெரிக்கப் பயணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்தனர்.

இலங்கைக்குச் சென்று அன்னை சீதா பிராட்டியைத் தேடுவதற்கு யார் சென்றார்? வானர வீரர்கள் பலர் இருந்தும் ஸ்ரீராமபிரான் வாயு புதல்வன் அனுமனையே தேர்ந்தெடுத்தார். அதுபோலவே குருதேவர் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸருக்குப் பல சீடர்கள் இருந்தபோதிலும், மேற்கு நாடுகளுக்குச் சென்று இந்து மதத்தின் சிறப்பையும், பாரதநாட்டின் ஆன்மீகச் செழிப்பையும் விளக்கிக் கூற, ஆங்கில மொழியில் சிறந்த புலமை பெற்றிருந்த சுவாமி விவேகானந்தரையேதான் குருதேவரின் ஆன்மா தேர்ந்தெடுத்தது, இறையருளின் ஏற்பாடு.

குருதேவர் இப்பயணம் பற்றியும் நரேந்தரின் ஆன்மீகக் கடமையையும் அறிந்தவர். இதைக் கருத்தில் கொண்டு, சீடர் சுவாமி விவேகானந்தர் இடைவிடாமல் குருதேவரிடம் "நிர்விகல்ப சமாதி" அளிக்குமாறு கோரியதை ஏற்றுக்கொள்ளாமல் தவிர்த்தார். "உனக்கு நிறையக் கடமைகள் உள்ளன. அவற்றை ஆற்றவே உனது பணியாக ஏற்றுக்கொள்" என்று கூறியதோடு ஏற்கனவே தெரிவித்தபடி தமது ஆன்மீகச் செல்வத்தை நரேந்திரருக்கு மாற்றியருளினார்.

<u>**குருதேவரின் திட்டம்**</u> : நரேந்திரன் ஆற்றவேண்டிய கடமைக்கான திட்டத்தை வகுத்தவர் குருதேவரே. பரம்பொருள் பற்றிய ஞானத்தை பூரணமாகப் பெற்றவர் விவேகானந்தர். இவ்வுண்மை குருதேவருக்கு நன்றாக தெரியும்.

"தான் யாரென்று **நரேந்திரன்** எப்போது உணர்கிறானோ, அதன் பின்னர் அவனால் ஒரு கணங்கூட இந்த உடலில் இருக்க முடியாது. அவ்வாறு உணரும்போது நரேந்திரன் தனது விருப்பப்படி உலகை விட்டு மறைவான். எனவேதான் பரம்பொருள் பற்றிய பூரண ஞானத்தை நரேனிடம் இப்போதைக்கு ஒரு திரையிட்டு மறைத்து வைக்கும்படி நான் ஸர்வேச்வரியிடம் பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறேன்.

ஏனெனில் அவனால் இந்தவுலகில் நிறைவேறவேண்டிய காரியங்கள் எவ்வளவோ இருக்கின்றன. இருப்பினும் இந்தத் திரை மிகவும் மெல்லியதாக இருக்கிறது. அது எந்த நிமிடமும் அறுந்துவிடும்" என்று குருதேவர் கூறியதாகச் செய்தி உள்ளது.

சுவாமி விவேகானந்தரும் தமது மேற்கு நாடுகளின் ஆன்மீகப் பயணங்களும், கடமைகளும் முடிந்த பின்னர் தமது மஹா சமாதி பற்றித் தமது சீடர் **மன்மதநாத்** என்பவரிடம் கூறியது :

**"நானும் மாயைக்குள்தான் இருக்கின்றேன். நான் மாயையுடன் தான் விளையாடிக் கொண்டிருக்கிறேன். ஆனால் ஒன்று ; நான் விரும்புகிற வினாடியே இந்த விளையாட்டை முடித்துக்கொள்ள முடியும்."**

பரிவ்ராஜகராக பாரதம் முழுவதும் பயணம் மேற்கொண்டு ஆன்மீக உறுதியுடன் அனுபவமும் பெறவும், குமரியில் கடல் நடுவே உள்ள பாறையில் தனித்தவம் மேற்கொள்ளவும் அடுத்து இராமநாதபுரம் மன்னர் பாஸ்கர சேதுபதி முதலிலும், சென்னை அன்பர்கள் தொடர்ந்தும் சிகாகோ மாநாட்டில் பங்கேற்க வற்புறுத்தியதும், மாநாட்டில் பங்கேற்க தமது ஒப்புதலை வழங்கவும், பின்னர் மாநாட்டில் பங்கேற்று சுமார் மூன்றரை ஆண்டுகள் அமெரிக்காவிலும் ஐரோப்பிய நாடுகளிலும் தமது ஆன்மீக கர்ஜனை வாயிலாகத் தமது கடமைகளை வெற்றிகரமாக முடித்துக்கொண்டு உலகப் புகழுடன் தாயகம் திரும்பவும் குருதேவரின் தெய்வீக அருளே விவேகானந்தருக்கு ஓர் உந்து சக்தியாகச் செயலாற்றியது நமக்குப் புலனாகின்றது. ஆதிசங்கரரின் அரும்பெரும் ஆன்மீகப் புரட்சிக்கும், இந்து சமய மேம்பாட்டிற்கும் இணையாக ஏற்பட்ட ஓர் எழுச்சியே. சுவாமி விவேகானந்தரின் சிகாகோ மாநாட்டுப் பங்கேற்பும்.

**மேற்கு நாடுகளினல் ஆற்றிய மனிதநேயம் போற்றும் ஆன்மீகப் பணிகளும்.**

Swami Vivekananda's first Address at the Parliament of Religions of Chicago on 11th September, 1893.

**Sisters and Brothers of America.**

It fills my heart with joy, unspeakable, to rise in response to the warm(welcome) and cordial welcome which you have given us. I thank you in the name of the most ancient order of monks in the world. I thank you in the name of the mother of religions and I thank you in the name of millions and millions of Hindu people of all classes and sects.

My thanks, also to some of the speakers on this platform who, referring to the delegates from Orient, have told you that these men from far off nations may well claim the honour of bearing to different lands the idea of toleration. I am proud to belong to a religion which has taught the world both tolerance and universal acceptance. We believe not only in universal toleration, but we accept all religions as true. I am proud to belong to a nation which has sheltered the persecuted and the refugees of all religions and all the nations of the earth. I am proud to tell you that we have gathered in our bosom the purest remnant of the Isralies who came to Southern India and took refuge with us in the very year in which their holy temple was shattered to pieces by Roman tyranny. I am proud to belong to the religion which has sheltered and is still fostering the remnant of the grand Zoroastrian nation. I will quote to you, brethren, a four lines from a hymn which I remember to have repeated from my earliest boyhood, which is every day repeated by millions of human beings;

"As the different streams, having their sources in different places, all mingle their water in the sea so O, Lord, the different paths which men take through different tendencies, various though they appear, crooked or straight, all lead to Thee."

The present Convention, which is one of the most august assemblies ever held, is itself a vindication, a declaration, to the world of the wonderful doctrine preached in the Gita :

"Whosoever comes to me through whatsoever form, I reach him ; all men are struggling through paths which in the end lead to me. Sectarianism, bigotry and its horrible descendants, fanaticism have long possessed this beautiful earth. They have filled the earth with violence, drenched it often and often with human blood, destroyed civilization and sent whole nations to despair. Had it not been for these horrible demons, human society would be far more advanced than it is now. But their time is come and I fervently hope that the bell that tolled this morning in honour of this convention may be the death knell of all fanaticisms, of all persecution, with the sword or with the pen, and of all uncharitable feelings between persons, wending their way to the same goal.

சிகாகோ மாநாட்டில் பங்கேற்ற சுவாமி விவேகானந்தர் பாரதத்தின் ஒப்பற்ற ஆன்மீகப் பெருமையையும், இந்து சமயத்தின் தனிச்சிறப்பையும் தமது குருதேவர் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸரின் ஆன்மீக மேன்மையையும், அமெரிக்க மக்களுக்கும், ஐரோப்பிய நாட்டினர்க்கும் குறிப்பாக அன்று நமது நாட்டை ஆட்சி செய்துகொண்டிருந்த பிரிட்டிஷாருக்கும் திறம்பட விளக்கி ஆன்மீக வெற்றியுடன் 1987 ஜனவரியில் இங்கிலாந்திலிருந்து இலங்கை, யாழ்ப்பாணம் வழியாக தனது தாய்நாட்டிற்குத் திரும்பினார்.

வெளிநாட்டு ஆன்மீகப் பயணங்கள் நிறைவு பெற்ற பின்னர் தாயகம் திரும்பும்போது முதலில் தமது சேது நாட்டில் சுவாமிகள் தமது திருப்பாதங்களைப் பதிக்கவேண்டும் என்று மன்னர் பாஸ்கர சேதுபதி சுவாமி விவேகானந்தரிடம் வேண்டுகோள் விடுத்திருந்தார்.

சுவாமி விவேகானந்தரும் மன்னரின் வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு இங்கிலாந்து நாட்டிலிருந்து இலங்கை, யாழ்ப்பாணம் வந்தவர், ஒரு ஸ்டீமரில் சுமார் ஐம்பது மைல்கள் (சுமார் எண்பது கிலோமீட்டர்கள்) கடலில் பயணித்து சேது சீமையின் பாம்பன் குந்துகாலில் தாய்நாட்டிக்குத் திரும்பினார்.

## தாயகம் திரும்பிய சுவாமி விவேகானந்தரும் முதல் வரவேற்பு அளித்த மன்னரும்

17.01.1897 அன்று யாழ்ப்பாணம் தமிழர் **மேதகு குமாரஸ்வாமி மன்னர் பாஸ்கர சேதுபதி** அவர்களுக்கு தந்தியில் ஒரு செய்தி அனுப்பினார். "**சுவாமி விவேகானந்தர்** 27.01.1897 அன்று இராமநாதபுரத்திற்கு விஜயம் செய்யவுள்ளார்." மன்னர் சேதுபதி அவர்களும் மக்களும் பேரானந்தம் அடைந்தனர். இராமநாதபுரம் விஜயம் தவிர்க்கப்படாமல் இருக்குமாறு சுவாமிகளை மன்னர் சேதுபதி தந்தி மூலம் கேட்டுக் கொண்டார். **சுவாமிகளும் தமது இராமநாதபுரம் வருகையை உறுதி செய்தார்.**

மன்னர் மற்றும் மக்களின் மகிழ்ச்சிக்கும் உற்சாகத்திற்கும் அளவே இல்லை. வரவேற்பிற்கான ஏற்பாடுகள் மன்னரின் உத்தரவின் பேரில், அரண்மனை பிரதானிகளும், நகரின் முக்கியப் பிரமுகர்களும் இணைந்து செய்தனர். ஆயிரம் ஏழைகளுக்கு அன்னதானம் வழங்க மன்னர் ஏற்பாடு செய்தார். யாழ்ப்பாணத்திலிருந்து ஸ்டீமரில் பாம்பன் - குந்துகால் வரும் சுவாமிகளை வரவேற்க மன்னர் சேதுபதி அரண்மனையின் பிரதானிகளுடன் பாம்பன் செல்ல ஆயத்தமானார். தமிழறிஞரும், மதுரைக் கல்லூரி தமிழ்ப் பேராசிரியருமான **ம.கோபாலகிருஷ்ணய்யர் அவர்களையும் மன்னர் தம்முடன் அழைத்துச் சென்றார்.** (அவரின் வயது 19 மட்டுமே)

(Leaving Jaffna a little while after midnight on 26th January 1897, by a special steamer, chartered to Pamban, Swamiji arrived at Pamban - Kunthukal, roughly a fifty mile journey on sea, at around three in the night.)

## 27.01.1897 இராமநாதபுரம் வரவேற்பு

சுவாமிகள் பயணித்து வந்த ஸ்டீமரைப் பார்த்தவுடன் எல்லையில்லா மகிழ்ச்சியோடு மன்னர் பாஸ்கர சேதுபதி அவர்களும் அவருடன் வந்த அரசுப் பிரதானிகளும், சுவாமிகளை வரவேற்று, சிறந்த முறையில் அலங்கரிக்கப்பெற்றிருந்த படகில் எழுந்தருளச் செய்து, சிம்மாசனம் போன்ற ஓர் இருக்கையில் அமரவைத்து, சுவாமிகளின் திருப்பாதங்களுக்கு சிறப்பான காலணிகளைத் தாமே அணிவித்து, தாமும் உடன்வந்த அனைத்து பிரதானிகளும் சுவாமி விவேகானந்தரின் பாதங்களில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கினர். தாயகம் திரும்பும் சுவாமிகள் தமது வேண்டுகோளை ஏற்று முதன்முதலில் தமது சேது சீமையில் தமது திருப்பாதங்களைப் பதித்து, தமது மரியாதையை ஏற்றுக்கொண்டு கௌரவப்படுத்தியது, தமது சிரசிற்கு விலையுயர்ந்த அணிகலனால் கிடைக்கும் கௌரவத்தைக் காட்டிலும் பல மடங்குகள் உயர்ந்த கௌரவம் என்று குறிப்பிட்டுப் பேருவகையடைந்தார்.

சுவாமிகளின் சிங்காரப் படகு கரையை அடைந்ததும், ஓர் அழகான ஊர்தியில் சுவாமி விவேகானந்தரை அமரவைத்து, ஒரு மைல் தூரம் ஊர்தியை மன்னரும், பிரதானிகளுமே, மன்னரின் பங்களா வரை இழுத்துச் சென்றனர்.

மன்னர் சேதுபதி அவர்கள் சுவாமி விவேகானந்தரிடம் கொண்டிருந்த அன்பையும் மரியாதையையும் வர்ணிக்க வார்த்தைகள் இல்லை. இருவருடைய சந்திப்பும் உள்ளங்களை உருக வைத்தது. ஸ்ரீ ராமச்சந்திரர், வசிஷ்டர், விச்வாமித்திரர், பரத்வாஜர் போன்ற மஹரிஷிகளிடம் கொண்டிருந்த அடக்கத்தையும் மரியாதையையும் உவமையாகக் கொள்ளலாம். **இதிகாச ஸ்ரீராமபிரான் மகிழ்ச்சியுடன் மன்னரின் ஆதிமுன்னோருக்கு வழங்கிய சிறப்புப் பெயர்தானே "சேதுபதி** !"

27.01.1897 காலை மன்னர் சுவாமிகளை முதலில் ராமேஸ்வரம் கோயிலுக்கு அழைத்துச் சென்றார். கோயிலில் தரிசனம் முடித்த சுவாமிகள் ஆற்றிய உரையில் வலியுறுத்திய கருத்து

He emphasized the uselessness of worship unless attended with practicality, help to the poor, unselfishness and purity. (Swamiji's golden words echo the qualities of head and heart of King Bhaskara Sethupathy)

Swamiji's original remarks about his visit to the temple were inscribed in a stone plaque and was fixed at the entrance of the temple : "I have great pleasure in testifying to the politeness and ready service of the priests and supervisors of this temple" **- Rameswaram Vivekananda**

27.01.1897 மாலை 6 மணிக்குப் பிறகு புராண வரலாற்றுப் புகழ்பெற்ற சேதுநாட்டு அரசின் சார்பில் சுவாமிகளுக்கு மிகச் சிறந்த வரவேற்பு அளிக்கப்பெற்றது. மன்னரின் சகோதரர் திரு.**தினகரஸ்வாமி** வாசித்தளித்த வரவேற்புப் பத்திரம் ஒரு வெள்ளிப் பேழையில் வைத்து சுவாமிகளிடம் சமர்ப்பிக்கப்பெற்றது.

**இந்த வரவேற்புப் பத்திரம் பிற வரவேற்பு மடல்களைக் காட்டிலும் பவித்ரமானது. ஸம்ஸ்க்ருத மொழியில் ஸ்ரீ பரமஹம்ஸ, யதிராஜ, திக்விஜய கோலாஹல, ஸர்வமத ஸம்ப்ரதிபன்ன, பரமயோகீஸ்வர, ஸ்ரீமத் பகவான் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸ, கரகமல ஸஞ்ஜாத, ராஜாதிராஜ, ஸேவித, ஸ்ரீ விவேகானந்த ஸ்வாமிஜி", தாய்நாட்டிற்குத் திரும்பி வரும்போது, இதிஹாஸ மஹாவீரர் பகவான் ஸ்ரீராமச்சந்திர சக்ரவர்த்தி காலடிப் புண்ணியம் பெற்ற புனித பூமியாகிய சேதுபந்தராமேஷ்வர் என்ற இராமநாதபுரம் சமஸ்தானத்திற்கு முதன் முதலாக விஜயம் செய்து பெருமைப்படுத்திய தங்களை பணிவன்புடன் வரவேற்பதில் மிகவும் பெருமையடைகிறோம்.**

ஸ்வாமி விவேகானந்தர் மன்னர் பாஸ்கர சேதுபதி அவர்களுக்குத் தமது பாராட்டையும் நன்றியையும் தெரிவித்து உரிய முறையில் தமது பதிலுரையை ஆங்கிலத்தில் நிகழ்த்தினார். மதுரை வரவேற்பிலும் மன்னரைப் பாராட்டி நன்றி தெரிவித்தார். மன்னரைப் பாராட்டி ஸ்வாமிஜி ஆங்கிலத்தில் ஆற்றிய உரையின் தமிழாக்கம் படித்து மகிழ்ச்சியடையுங்கள்.

“மேன்மை தங்கிய ராமநாதபுரம் மன்னர் அவர்களே! மேலை நாடுகளில் நமது மதத்திற்காகவும், நம் தாய்நாட்டிற்காகவும் என்னால் ஏதாவது சிறிய வேலை செய்ய முடிந்தது என்றால், தங்கள் சொந்த வீடுகளிலேயே ஆழமாகப் புதைந்து கிடக்கின்ற, விலை மதிப்பற்ற ரத்தினங்களை அறியாத நம் நாட்டு மக்களின் கவனத்தை அவற்றின் மீது திருப்பி, அவர்களின் உணர்ச்சிகளை விழிக்கச் செய்ய முடிந்தது என்றால், அறியாமையாகிய குருட்டுத்தனத்தின் காரணமாக, தாகத்தால் தவித்து வாடி, உயிர் பிழைக்கும் வழிதேடி, எங்கோ உள்ள சாக்கடைத் தண்ணீரைக் குடித்துக் கொண்டிருந்தவர்களை அழைத்து தங்கள் சொந்த வீட்டிலேயே வற்றாமல் பொங்கிக் கொண்டிருக்கின்ற நிரந்தர ஊற்று நீரை குடிக்குமாறு என்னால் செய்ய முடிந்தது என்றால், நமது மக்களை விழிப்புணர்ச்சி செயல்படத் தூண்டி எல்லாவற்றிலும் இந்தியாவின் உயிர்துடிப்பு மதம்; மதம் மட்டுமே என்பதைப் புரியவைக்க முடிந்தது என்றால், அந்த உணர்வு இல்லாது போனால், எத்தனை அரசியல் இருந்தாலும், இந்த நாட்டு மக்களின் ஒவ்வொருவரின் தலைமீதும் குபேரனின் செல்வத்தையே கொட்டிக் குவித்தாலும், இந்தியா அழிந்துவிடும் என்று நான் அவர்களுக்கு உணர்த்த முடிந்தது என்றால், இதற்காக இந்தியாவிலும் மற்ற நாடுகளிலும் என்னால் ஏதாவது செய்ய முடிந்தது என்றால் அதற்கான பெருமை முக்கியமாகத் தங்களையே சாரும்.

ஏனெனில் நீங்கள்தான் இடைவிடாமல் என்னை இத்தகைய வேலையில் தூண்டி வந்தீர்கள். எதிர்காலத்தை உள்ளுணர்வால் புரிந்துகொண்டது போல நீங்கள்தான் என் கைகளைப் பிடித்துச் சென்றீர்கள். எல்லா வழிகளிலும்

உதவினீர்கள் - ஒருபோதும் தயங்காமல் என்னை மிகவும் உற்சாகப்படுத்தினீர்கள். எனவேதான் எனது வெற்றியில் மகிழ்கின்ற முதல் மனிதராக நீங்கள் இருக்கிறீர்கள். அதைக் காணவே நான் இந்தியாவிற்குத் திரும்பும் வழியில் உங்கள் அரசில் முதன்முதலில் இறங்க நேர்ந்தது போலும் !

எனக்கு நீங்கள் தந்த மனம் நிறைந்த கனிவான வரவேற்பில் என் நெஞ்சம் நிறைந்த நன்றிகளை ஏற்றுக்கொள்ளுங்கள். மேன்மை தங்கிய இராமநாதபுரம் மன்னர் என்னிடம் கொண்டிருக்கும் அன்பிற்கு வார்த்தைகள் மூலம் நன்றி செலுத்துவது என்பது முடியாத காரியம். என் வாயிலாக ஏதாவது நற்காரியம் செய்யப்பெற்று இருக்குமேயானால், அது இந்த மனிதரால்தான். இந்தியா இந்த மனிதருக்குக் கடமைப்பட்டுள்ளது. ஏனெனில் சிகாகோ சர்வமத மகாசபைக்கு நான் போகவேண்டும் என்று நினைத்தவரே இவர்தான். அந்த எண்ணத்தை என் மனத்தில் எழுப்பியவரும், நான் அங்கு நிச்சயம் சென்றாக வேண்டும் என்று இடைவிடாமல் வற்புறுத்தியவரும் இவர்தான். இப்போதும் என் பக்கத்தில் நின்றுகொண்டு முன்பு போலவே உற்சாகத்துடன் மேலும் மேலும் நான் பணிகளில் ஈடுபட வேண்டும் என்று எதிர்பார்க்கிறார். அன்பான நமது தாய்நாட்டின் உயர்விற்காக **ஆன்மீக வழியில் ஈடுபட இவரைப் போல் இன்னும் ஐந்தாறு மன்னர்கள் இருக்கவேண்டும்** என்று நான் விரும்புகிறேன்.

சுவாமி விவேகானந்தர் யாழ்ப்பாணத்திலிருந்து சேது சீமையின் பாம்பனுக்கு புறப்பட்டு இரவு 3 மணிக்கு வந்து சேர்ந்தது - 26.01.1897. 53 ஆண்டுகள் கடந்தன. 26.01.1950 நாளன்று இந்தியா ஜனநாயகக் குடியரசு ஆயிற்று.

சுவாமி விவேகானந்தர் தாயகம் திரும்பிய நாள் 28.01.1897 காலை 5 மணி. நாற்பது அடி உயரத்தில் நினைவுத் தூண் மன்னர் அவர்களால் நிறுவப்பெற்றது. இதில் வேதவாக்கியம் "**ஸத்யமேவ ஜயதே**" பொறிக்கப்பெற்றது. இந்தியக் குடியரசு அரசின் குறிக்கோளாக அரசு சின்னத்தில் "**ஸத்யமேவ ஜயதே**" பொறிக்கப் பெற்றுள்ளது.

29.01.1897 அன்று மன்னர் பாஸ்கர சேதுபதி சுவாமிகளுக்கு மரியாதை செய்யும் வகையில் அரச சபையைக் கூட்டினார். அதில் மன்னருக்கு "ராஜரிஷி" என்ற பட்டத்தை சுவாமிஜி வழங்கினார். மன்னராக இருக்கின்ற அதே வேளையில் ஒரு முனைராகவும் திகழ்கிறார் என்பதே பொருள். மன்னரின் வேண்டுகோளை ஏற்று இந்தியாவில் "சக்தி வழிபாடு" என்ற தலைப்பில் ஃபோனோகிராப்பில் சொற்பொழிவு ஒன்றை சுவாமிஜி பதிவு செய்தார். (மன்னர் 03.11.1868 அன்று பிறந்தார். 1903 ஆம் ஆண்டு மறைந்தார். அப்போது வயது 35.)

Swami Vivekananda in his address to the citizens of Madurai, observed:

"Being in Madurai as the guest of your well-known citizens and gentleman, the Rajah of Ramnad, one fact comes prominently to my mind. Perhaps, most of you are aware that it was the Raja who FIRST put the idea into my mind of going to Chicago and it was he who, all the time, supported it with all his heart and influence.

A good deal, therefore, of the praise that has been bestowed on me in this address ought to go to this noble man of Southern India. I only wish that instead of becoming a Raja, he had become a SANNYASIN for that is what he is reallyfit for.

Swami Vivekananda Honoured the Raja Sethupathy as RAJARISHI, a title that adorned King JANAKA of Mithiai and father of Seetha, wife of Sri Ramachandra of the Epic Ramayana. As King Janaka got her as a baby from the earth when it was ploughed for a Yagnya. Hence the name Seetha. Her other names are Janaki, Janaka's daughter, Mythili, Princess of the capital city - Mithilai and Vaidehi, daughter of the King of the Kingdom Videha.

Reports published in News papers..

The **INDIAN MIRROR** on 21.01.1897 about the historic wecome to Swamiji in Tamilnadu.

He may not be a Roman Hero, returning from the field of battle with laurels of victories in his brow. But peace hath her victories no less than war and, in the bloodless battle that he has fought on behalf of a Religion which teaches the highest doctrines of peace and brotherhood amongst mankind, entitles him to the eternal gratitude of his fellow believers.

**Amritha Bazaar, Calcutta, 20.01.1897.** The westerners expressed their uncying does this not remind us that India is also a conquering country, though it conquers in its own way. Without the help of steel, gun powder and dynamite?

Being a native of SIVAGANGA born, brought up and, had served in Sivaganga, I record here in a few lines from the Welcome address and Swamiji's reply for the readers' delight.

Swamiji was offered a grand welcome in Manamadurai on his way to Madurai, by the Zaminder of Sivaganga and the elite of Sivaganga and Manamadurai as Sivaganga was not connected with the railway line. Sri Krishna Sastrigal, Sanskrit Pandit of Raja's High School, Sivaganga had prepared the welcome address in Sanskrit and the Headmaster, Sri S.M.Narayanaswami Iyer, in English.

The address in English says, "In the fullness of time, you will succeed in disintegrating the dross that is temporarily covering the genuine gold of Indian philosophy casting it in the powerful mint of your intellect, will

make it current coin throughout the whole globe. This firm belief will, at no distant date, make you just like your contemporary in the political sphere, rule an empire overwhich the sun never sets, only with this difference that hers is an empire over matter and yours will be over mind.

| | |
|---|---|
| அறிவு வேறு; | பாசம் வேறு; |
| வீரம் வேறு; | முரட்டுத்தனம் வேறு; |
| ஏழ்மை வேறு; | எளிமை வேறு; |
| போட்டி வேறு; | பொறாமை வேறு; |
| கற்பது வேறு; | படிப்பது வேறு; |
| சர்ச்சை வேறு; | தர்க்கம் வேறு; |
| இரை தேடு; | இறையையும் தேடு; |

மாதா, பிதா, குரு, தெய்வம். தாய்க்கு முதலிடம்; அடுத்து வருகிறார் தந்தை; இவ்விருவருக்கும் அடுத்தாற்போல் குரு முக்கியத்துவம் பெறுகிறார். இவ்வரிசையில் தெய்வம், குருவிற்கு அடுத்தாற்போல் வருகின்றது. **கடவுளை நமக்குக் காட்டுபவர் குரு. எனவே கடவுளுக்கும் மேல் குரு.**

தேசிய கவி சுப்பிரமணிய பாரதியார் தமது **குருமணி நிவேதிதா தேவி**யை வணங்கி இயற்றியது.

அருளுக்கு நிவேதனமாய் அன்பினுக்கோர்
கோயிலாய் அடியேன் நெஞ்சில்
இருளுக்கு ஞாயிறாய் எமதுயர் நா
டாம் பயிர்க்கு மழையாய் இங்கு
பொருளுக்கு வழியறியா வறிஞர்க்குப்
பெரும் பொருளாய்ப் புன்மை தாதச்
சுருளுக்கு நெருப்பாகி விளங்கிய தாய்
நிவேதிதையைத் தொழுதுநிற்பேன்





அன்பிற்கு இலக்கணம் வகுத்த
அமரர்

**பாப்பாத்துரை(எ)**

**வே. திருவரங்கராசன்**

பாப்பா துரை என்ற வே. ஸ்ரீரங்கராஜன்
ஸ்ரீ ராமகிருஷ்ணா பள்ளியின் முன்னாள் மாணவர்.
ஆன்மீக அன்பர். சிவகங்கை மன்னர் துரைசிங்கராஜா
மற்றும் அனைத்து மன்னர் குடும்பத்தாரின் செல்லக்குழந்தை.
கவியோகி மஹரிஷி சுத்தானந்த பாரதியார்
இவருக்கு **மலர்முக அன்பர்** என்ற பட்டம் வழங்கினார்.

- *R.*வேங்கடகிருஷ்ணன்

* * *

தந்தைக்குப்பின் தனையன்
மிகச்சிறந்த தர்மகர்த்தா
பாகனேரி

**மு.பழ.கண்ணப்ப செட்டியார்**

அவர்கள்
தொழிலதிபர், மதுரை





Swamy Vivekananda's golden sayings collected by **Shri.N.Arun.**

Learn to feel yourself in other bodies, to know that we are all ONE. Throw all other nonsense to the winds. Spit out your actions, good or bad and never think of them again. What is done, is done. Throw off superstition. Have no weakness even in the face of death. Do not repeat do not over past deeds and do not remember your good deeds; BE AZAD (free).

The weak, the fearful, the ignorant will never reach at man. you cannot undo what you have done; the effect must come; face it but be careful never to do the same thing again. Give up the burden of all deeds to the LORD; give all, both good and bad. Do not keep the good to yourself and give only the bad. God helps those who do not help themselves.

- From the complete works of Swami Vivekananda.

It is a great thing to take up a grand ideal in life and then give up one's whole life to it. For what otherwise is the value of life, this vegetating, little, low life of man? Subordinating it to one high ideal is the only value that life has. This is the great work to be done in India. I welcome the present religious revival; and i should be foolish if i lost the opportunity of **striking the iron while it is not.**

- Last para in Swami Vivekananda's lecture in reply to the welcome the Raja of Sivaganga and the citizens of Sivaganga and Manamadurai offered at Manamadurai.

**அன்னை ஸ்ரீசாரதாமணிதேவி அருளிய பொன்மொழி**

"நாம் நமது பிரார்த்தனையில் முக்கியமான இரண்டு கோரிக்கைகளை மட்டும் இறைவனிடம் சமர்ப்பிக்க வேண்டும். ஒன்று-நம்மிடம் இறைப்பற்று(பக்தி) வளர வேண்டும். இரண்டு-நம்மிடம் உலகப்பற்று நீங்க வேண்டும்."

Golden sayings collected by Shri.S.Srinivasa raghavan, Senior Advocate, High court, Madurai and Vice President, Sri.Ramakrishna School, Sivaganga.

We have, as it were, thrown a challenge to the whole world from the most ancient times. In the west, they are trying to solve the problem how much a man can possess, and we are trying here to solve the problem on with how little a man can live. The struggle and this difference will still go on for some centuries. But if history had any truth in it and if prognostications ever prove true, it must be that those who train themselves to live on the least and control themselves well will in the end gain the battle.

From Swami Vivekananda's lecture is Kumbakonam on 'The Mission of the Vedanta.'

தண்ணீரில் படகு செல்லலாம்-ஆனால் படகில் தண்ணீர் ஏறக்கூடாது. ஆன்மீக ஈடுபாடு உடையோர் உலகில் வாழலாம். ஆனால் அவர்களிடம் உலகப்பற்று இருக்கக்கூடாது. தாமரை இலைத் தண்ணீர்போல உலகப்பற்று இன்றி வாழ வேண்டும். (இந்த உபதேசம் நமது செயல்பாட்டிற்குக் கொண்டுவருவது எளிதல்ல; இடைவிடாத பயிற்சி தேவை)

- குருதேவர் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர்

We must have a hold on the spiritual and secular education of the nation. Do you understand? you must dream it, you must talk it, you must think it and you must work it out. Till then there is no salvation for the race.

- Swami Vivekananda.

பொறுத்திருப்பதன் மூலம் எந்தக் காரியத்தையும் சாதித்து விடலாம். தண்ணீரை ஒரு சல்லடையில் கூட எடுத்துச் செல்ல முடியும், அது உறையும் வரை பொறுத்திருப்போமானால்.

Consciousness is freedom from attachment; consciousness is immaculate; consciousness, is intimacy with god; the consciousness that is free of forgetfulness is freedom from fear; consciousness is the immortalising ambrosia; know that consciousness is everything.

- Bhagwan Shri.Ramana.

♦♦♦



Golden sayings collected by **Smt.V.Padmavathy,** an alumnus and member of the centenary Celebrations Committee, Sri.Ramakrishna School, Sivaganga.

Experience is what you get when you do not get what you want.

All educated are not literates; all literates are not educated. History tells us Chatrapathy Samrat Shivaji and Akbar the Great were not literates; but they, however, excelled in their role as very great rulers.

Feel like Budha and you will be a Budha, feel like Jesus Christ, you will be a Christ. Feel like Aandaal, you will be an Aandaal. Feel like sister Nivedita, you will be a Nivedita.

இறைவனிடம் ஈடுபாடு கொண்டு இறைவனுடன் தங்களை ஐக்கியப்படுத்திக் கொள்பவர்களின் மனதிலும், செயலிலும் காமம், காஞ்சனம் உள்ளிட்ட அனைத்து உலகப் பற்றுகளும் நீங்கிவிடும். அவர்களுடைய மனம், செயல் இரண்டும் எப்பொழுதும் இறைவனைப் பற்றிய சிந்தனையிலேயே ஆழ்ந்துவிடும்.

- அன்னை ஸ்ரீசாரதாமணிதேவி

சுவாமி விவேகானந்தர் அமெரிக்காவின் சிகாகோ நகரில் நடைபெற்ற உலக சமயங்களின் மாநாட்டில் இந்தியாவின் சார்பில், ஹிந்து சமயத்தின் பிரதிநிதியாக பங்கேற்க வேண்டும் என்று சுவாமிகளை முதன்முதலில் வற்புறுத்தியவரும், தொடர்ந்து இக்கோரிக்கையை வலியுறுத்தியவரும் இராமநாதபுரம் மன்னர் பாஸ்கரசேதுபதி. அமெரிக்கா மற்றும் மேற்கு நாடுகளிலிருந்து தாயகம் திரும்பும்போது. மன்னர் சேதுபதி அவர்களின் வேண்டுகோளை ஏற்று, சுவாமி விவேகானந்தர் சேதுசீமையின் பாம்பன் குந்துகாலில்தான் முதலில் இறங்கினார். சேது சமஸ்தானம் சார்பில் வரவேற்பு விழா ஏற்பாடு செய்த மன்னர், சுவாமி விவேகானந்தர் மீது தாம் கொண்டிருந்த பக்தியை எவ்வாறு வெளிப்படுத்தினார், பாருங்கள். "குதிரைகள் பூட்டிய சாரட் வண்டியில் திருவீதிகள் வழியே உலாவாக அழைத்துச்செல்லப் பெற்றார்.

ஒரு கட்டத்தில், மன்னர் பாஸ்கர சேதுபதி உற்சாகம் வயப்பட்டு, சாரட்டில் பூட்டியிருந்த குதிரைகளை அவிழ்த்து விடச்செய்து, தாமும் தமது திவான் மற்றும் அரசு அதிகாரிகளும் ஒன்றாக இணைந்து சாரட்டை இழுத்துச்சென்றனர். என்னே, மன்னர் சேதுபதியின் குருபக்தி, அடக்கம்!

Golden Sayings collected by Selvi. **V.Meera,** Retired, Manager Punjab National Bank and Member, The Centenary Celebrations Committee, Sri Ramakrishna School, Sivaganga; an Alumnius



தன்னைத்தவிர இரண்டாவதாக ஒன்று இருக்கின்றது என்று நினைக்கும்போதுதான் பயம், குழப்பம், ஏற்படுகின்றன. இரண்டாவதாக ஏதும் இல்லை என்ற உறுதி ஏற்படும்போது பயம், குழப்பம் ஏதும் இல்லை. ஆதிசங்கர பகவத்பாதர் அருளிய "அத்வைதம்" என்ற தத்துவம் கூறுவதும், "உள்ளது ஒன்றுதான்". சுவாமி விவேகானந்தர் ஆங்கிலத்தில் இயற்றிய 'The Song of the Sanyasin' கவிதைகள். அத்வைதம் பற்றிய ஓர் அருமையான விளக்கம்.

Never put off till tomorrow what you ought to do today. Always put off till tomorrow what you should not do at all.

Forgiveness is the noblest form of revenge.

To err is human; to forgive is Divine.

The face is the index of the mind; but not of the HEART.

Blessed are the pure in HEART for they shall see god. This alone will save mankind if all books and prophets were lost.

என்றும் நிலைத்து நிற்கும், ஒருநாளும் அழியாத உண்மைப் பொருளை உணர்ந்த மஹான்களை, அனுமன், குருதேவர் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் போன்ற தெய்வீக புருஷர்களை மக்கள் பின்பற்ற ஓர் எடுத்துக்காட்டாக மக்கள் முன்வைக்க வேண்டும். அர்ஜுனனைக் கருவியாக்கிக் கொண்டு 'கீதையை' உபதேசித்த கண்ண பரமாத்மாவை வழிபடச் செய்யுங்கள். சக்தி வழிபாட்டை நடைமுறையில் கடமையாக மேற்கொள்ள வேண்டும்.

- சுவாமி விவேகானந்தர்

மஹா விஷ்ணுவின் அவதாரங்களில் கிருஷ்ணாவதாரம் குறிப்பிடத்தக்கது. ஏனெனில் கீதையை உபதேசித்த ஜகத்குரு (கிருஷ்ணம் வந்தே ஜகத்குரு). - கிருஷ்ண பரமாத்மா

Golden Sayings collected by Shri. S.Chandrasekaran, an alumnus Member, The Centenary Celebrations Committee, Sri Ramakrishna School, Sivaganga.

**கடோபநிஷத் வழங்கும் பொன்மொழி.**

:உத்திஷ்டத, ஜாக்ரத, ப்ராப்யவரான் நிபோதன! ;

தமிழில்: எழுமின், விழிமின், குறிசாரும் வரை நில்லாதே, செல்மின்.

ஆங்கிலத்தில் : ARISE, AWAKE, Stop not till the goal is reached.

Do unto others as you would (wish) they should do unto you.

The reception at Calcutta was differents. Swami Vivekananda was addressed as 'Dear Brothers'. Swamiji, in his reply, reciprocated this. "Brothers, you have touched another chord in my heart, the deepest of all, and that is the mention of MY TEACHER, MY MASTER, MY HERO, MY IDEAL, MY GOD in life - Sri Ramakrishna Paramahamsha. If there has been anything achieved by me, by thoughts, or words, or deeds, or from my lips has ever fallen one word that has helped any one in the world, I lay no claim to it, it was His. All that has been life-giving, strengthening, pure and holy, has been his inspiration, his words and he himself."

**Parallel sayings in Tamil and English.**

சைவ நாயன்மார் மாணிக்கவாசகர் கூற்று :

"ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டொன்றாகும் ; அன்றியது வறினும் வந்தெய்தும் ஒன்றை நினையாதறி முன்வந்து நிற்பினும் நிற்கும் ; எனை ஆளும் ஈசன் செயல்"

William Shakesperer's 'HAMLET' Act V, Scene II :

There is a special providence in the falling of the sparrows. If it be now to come, it does not come, if it be not to come, yet will come. The readiness is all.

♦♦♦



Golden Sayings collected by Shri. **S.V.Jithendran,** an alumnus and Senior Chartered Accountant, Chennai. He is a member of the Centenary Celebrations Committee, Sri Ramakrishna School, Sivaganga.

நாட்டில் இந்தயிந்த தேதிகளில் இவ்வளவு மழை பெய்யும் என்ற முன்னறிவிப்பு இந்துக்களுடைய பஞ்சாங்கத்தைக் கசக்கிப் பிழிந்தால், ஒரு துளி தண்ணீர் கூட வராது. ஆன்மீக நூல்களில் இருக்கின்ற நல்ல விஷயங்களை படிப்பதால் மட்டும் யாரும் ஆன்மீகவாதி ஆகிவிட முடியாது. இறைவனின் அன்பைப் பெறவேண்டுமென்றால், ஆன்மீக சிந்தனை உறுதிபெற ஆன்மீக நூல்களில் உள்ள நன்னெறிகளைப் பின்பற்றி வாழவேண்டும்.

**- குருதேவர் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்**

Nations like individuals must help themselves. This is real PATRIOTISM. If a nation cannot do that, its time has not yet come. It must wait. It is from Madras (non Chennai) that the new light must spread all over India. With this end, you must work. Calm, Silent and steady work and no newspaper humbing, no name - making, you must always remember.

- Swamy Vivekananda

The great idea that the world wants from us today, perhaps the lower classes than the higher, more the ignorant than the educated, more the weak than the strong, is the eternal grand idea of the Spiritual Onenes of the whole universe.

- Swami Vivekananda

ஒரு தனி மனிதனுக்கு பொருத்தமான ஒன்று, ஒரு தேசத்திற்குப் பொருந்தாது. வறுமையில் உழலும் ஒரு நாட்டிற்கு வளமான சமுதாயத்தின் கலாசார முறையை திணிப்பது தவறு. மிகவுயர்ந்த உண்மைகளை ஏற்றுக் கொள்வதற்கான பக்குவம் பெறாத நமது சகோதர, சகோதரிகளும் அவர்களுடைய உடனடித் தேவைகளுக்கேற்ற உலகாயத செயல்பாடுகள் ஒருவேளை நன்மையைத் தரலாம்.

- சுவாமி விகேகானந்தர்

ராஜாஜி என்று மரியாதையுடன் அழைக்கப்பெற்ற சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி அன்று ஒரு பள்ளி மாணவன்.

அவர் படித்துக்கொண்டிருந்த பள்ளிக்கு சுவாமி விவேகானந்தர் விஜயம் செய்தார். ராஜாஜி படித்துக்கொண்டிருந்த வகுப்பறைக்குள் நுழைந்தார். பகவான் கிருஷ்ணருடைய படம் சுவரில் மாட்டப்பெற்றிருந்தது. படத்தைக் காட்டி மாணவர்களிடம்,"கிருஷ்ணர் ஏன் நீல நிறமாக இருக்கிறார்" என்று கேட்டார். "கடலின் நிறம் நீலம், ஆகாயத்தின் நிறம் நீல நிறம். இரண்டும் எல்லையற்றது. இறைவனும் எல்லையற்றவன்" என்று பதில் அளித்தார் மாணவன் ராஜகோபாலாச்சாரி. மகிழ்ச்சியடைந்த விவேகானந்தர் கூறினார், "இந்தச் சிறுவன் பிற்காலத்தில் சிறந்த மனிதனாக உருவெடுத்து பெரும்புகழ் பெறுவான்". சுதந்திரப் போராட்டத் தலைவர்களில் ஒருவராக மஹாத்மா காந்தியின் மனசாட்சியாக பார ரத்னா விருது பெற்ற முதல்வராக ஆன்மீக சீலராக, புகழ்பெற்ற நிர்வாகியாக சாணக்யர் என்று பாராட்டப்பெற்றவராக ஓர் ஒப்பற்ற தலைவராகச் சிறப்பு பெற்றார்.

- சுவாமி விவேகானந்தரின் 150-ம் பிறந்த ஆண்டு மலர்

The great idea that the world wants from us today, perhaps the lower classes than the higher, more the ignorant than the educated, more the weak than the strong, is the eternal grand idea of the Spiritual Onenes of the whole universe.

- Swami Vivekananda

## சுவாமி விவேகானந்தர் பொன்மொழிகள்



தொகுத்தவர் : ஸ்ரீ. C.**கொங்கேஸ்வரன்,** பள்ளியின் முன்னாள் மாணவர் தலைவர், ஸ்ரீராமகிருஷ்ணா பள்ளியின் நூற்றாண்டு விழாக் குழு, சிவகங்கை மற்றும் தொழிலதிபர்.

- இன்னும் ஒரு நூற்றாண்டு பாரத நாட்டை கடவுளாக வணங்கினால் போதும் உண்மைக்காக நாம் எதையும் துறக்கலாம்; ஆனால் எதற்காகவும் நாம் உண்மையைத் துறக்கக்கூடாது.

- மிருக நிலையில் இருக்கும் மனிதனைப் பண்புள்ளவனாகவும், பண்புள்ளவனை தெய்வமாகவும்

- மதபோதனையும், இறைப்பற்றும் அற்ற கல்வி அறிவுள்ள அரக்கர்களையே உருவாக்குகிறது.
- முதலில் பசித்தவனுக்கு உணவு. மதங்கள் தத்துவங்கள், இறைவன் பற்றிய அனைத்துமே பிறகுதான்.
- Our heroes must be Spritual Leaders. Such a hero has been given to us in the person of Shri Ramakrishna Paramahamsa. If this nation wants to rise, take my word for it, it will have to rally enthusiastically around this name. It does not matter who preaches Sri Ramakrishna Paramahamsa, whether I or you, or anbody else. Within ten years of his Maha Samaadhi, this Spritual Power has encircled the globe.

**சுவாமி விவேகானந்தர் பொன்மொழிகள்**

தொகுத்தவர் : ஸ்ரீ. **S.உதயசங்கர்,** பள்ளியின் முன்னாள் மாணவர், ஸ்ரீராமகிருஷ்ணா பள்ளியின் நூற்றாண்டி விழா குழுவின் செயலாளர், தமிழ்நாடு அரசின் பணி நிறைவு பெற்ற வருவாய்த் துறையின் மாவட்ட உயர்நிலை அலுவலர்.



S.உதயசங்கர்

இந்த உலகிலேயே சிறந்த நாடு பாரத நாடு. மற்ற நாடுகள் சிங்கார பூமி. ஆனால் பாரத நாடு புண்ணிய புமி. பாரத நாட்டிலே பிறப்பதற்கு ஒருவன், ஒருத்தி புண்ணியம் செய்திருக்க வேண்டும்.

– மஹாபாரதம்

அன்பு என்றுமே நிச்சயம் நல்ல பயனையே அளிக்கும். ஒருபோதும் அன்பு வீண்போகாது.

'அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு'

அறிவு தலைக்கு கிரீடம்; அடக்கம் காலுக்குச் செருப்பு.
கிரீடம் அரசனுக்கு அடையாளம். செருப்பு காலுக்குப் பாதுகாப்பு. ஸ்ரீராமச்சந்திரரின் பாதுகைகள் பதினான்கு ஆண்டுகள் ஆட்சி செய்தன. பரதனால் வணங்கப் பெற்றன.

**ஆன்மா அழிவற்றது : அமரத்வம் பெற்றது.**

'நமசிவாய' - ஐந்தெழுத்து மந்திரம் (இந்து சமய சைவர்களுக்கு.)

ALLAH - (இஸ்லாமியர்களுக்கு)

JESUS - (கிறித்தவர்களுக்கு)

BUDHA - (பௌத்தர்களுக்கு)

SIKHS - (சீக்கியர்களுக்கு)

Swami Vivekananda, in his address to his 'loving friends and admirers in Calcutta, concluded his speech with these words :

"ARISE, AWAKE and stop not till the desired end is reached. Be not afraid for all great power, throughout the history of humanity has been with the people. From out of their varks have come all the greatest genuines of the world, and history can only repeat itself. Be not afraid, of anything. You will do marvelous work. It is fear that is the cause of our woes and it is fearlessness that brings heaven even in a moment."

♦♦♦

Golden Sayings collected by Lion T.N.Bharatidasan, Best Engineers, Sivaganga, who as the Architect constructed the New School Building (donated by the school Alumnus Sri. **K.S.Ramakrishnan,** I.A.S., in 2003), and now the New Prayer Hall.



Let all of us march towards
The goal and let that goal be:
A world without beggar's outstretched palm,

The MISER's heartless stony stare,
The piteous wail of want,
The pallid face of crime,
The livid lips of lies, the cruel eyes of scorn,
A race without disease of flesh and brain,
The married harmony of form and use,
Where life lengthens, fear dies,
Joy deepens, Love intensifies
And man / woman regains his / her dignity,
And to get these things realised
Let one and all strive towards the
Ideal enunciated by the Great Thiruvalluvar

"உறுபசியும் ஓயாப் பிணியும்
செறுபகையும் சேரா தியல்வது நாடு"

Quoted by Hon'ble Chief Minister C.N.Annadurai in his convocation, Address at Annamalai University on 18.11.1967 :

சுவாமி விவேகானந்தர் நேரடியாகவே மறைமுகமாகவோ அரசியலில் ஈடுபடவில்லை. ஆனால் சுவாமி விவேகானந்தரின் தேசபக்திக் கருத்துக்கள்தான் இந்தியாவில் தேசிய எழுச்சியை ஏற்படுத்தின; விடுதலைப் போராட்டம் தோன்றுவதற்கு அடித்தளம் அமைத்தன.

**- தேசிய கவி பாரதியார்**

இந்தியாவின் உண்மையான மகத்துவத்தையும் பார்ப்பதற்கு நமது கண்களைத் திறந்தார். அரசியலை ஆன்மீகப்படுத்தினார். இந்தியாவின் சுதந்திரம், அரசியல் பண்பாடு, ஆன்மீகத்தின் தந்தை (அவர்) சுவாமி விவேகானந்தர்.

**- மூதறிஞர் பாரதரத்னா ராஜாஜி**

சகோதரி நிவேதிதாவை முன்மாதிரியாக வைத்து, தமது புதுமைப் பெண் கருத்துக்களைத் தமிழக மக்களுக்கு பாரதியார் வாரி, வாரி வழங்கினார்.

–சுவாமி கமலாத்மானந்தர், பக்கம் 67

பாரதியார் பற்றிய ஸ்ரீராமகிருஷ்ண இயக்கச் சான்றோர்கள்.

♦♦♦



ஸ்ரீராமகிருஷ்ணா பள்ளி நூற்றாண்டு விழா ஆலோசனைக் குழு உறுப்பினர், சிவகங்கை ரமணா அசோசியேட்ஸ் வரி ஆலோசகர் ஸ்ரீ. V.S.V.K.**திரவியம்** அவர்கள் தொகுத்துள்ள பொன்மொழிகள் :

தமிழ்நாட்டின் சங்க காலப் புலவர் கணியன் பூங்குன்றனாரின் மனிதநேயம் போற்றும் பொன்மொழி, "யாதும் ஊரே யாவரும் கேளிர்". அமெரிக்காவின் சிகாகோ நகரில் நடைபெற்ற சர்வசமய மாநாட்டில் பங்கேற்ற சுவாமி விவேகானந்தர், "அமெரிக்க சகோதரிகளே, சகோதரர்களே" என்று விளித்து தமது உரையைத் தொடங்கினார். காலங்கள் மாறினலும், பாரதப் பண்பாடு மட்டும் எந்த மாற்றமும் அடையவில்லை.

பாரத நாட்டின் முன்னாள் குடியரசுத் தலைவர் 'பாரத ரத்னா' சர்வபள்ளி ராதாகிருஷ்ணன் கூறுகின்றார் :

மனிதகுலம் முழுவதையும் ஒரு குடும்பமாகவே நாம் கருதவேண்டும். இந்த ஆன்மீகத் தத்துவம் வாழ்க்கையின் நிரந்தரமாக உண்மைகள் பற்றிய ஆழ்ந்த அனுபூதி நிலையாகும். சுவாமி விவேகானந்தர், மனிதாபிமானம் நிறைந்த இச் செய்தியில் தேசபக்தியோடு இணைந்த ஆன்மீகத்தை மக்களிடையே பரப்பி அவர்களை விழிப்படையச் செய்தார். ஆன்மீக சக்தியும், கடமையுணர்வும், நற்செயல்களும் தூண்மையான வாழ்வும் உடையவர் உள்ளத்தில் (இதயத்தில்) இறைவனின் திவ்ய உருவம் பிரதிபலிக்கும்.

- குருதேவர் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர்

Coming generations may forget what one said and did but not know one made them feel. Feeling good or bed, get registered in the heard, the abode of God.

படகில் தண்ணீரும் வீட்டில் செல்வமும் நிறைந்துவிட்டால், தாமதம் செய்யாது, இரு கைகளாலும் அள்ளியள்ளி வெளியே தள்ளுங்கள். அப்பொழுதுதான் படகும் வீடும் அழியாமல் பிழைக்கும்.

There is no fortune greater than PEACE; there is no force greater Than PEACE; there is no excellent TAPAS greater that PEACE; there is no immortal life greater than (living in) PEACE.

♦♦♦

பொன்மொழிகள் தொகுப்பாளர் **ஸ்ரீ அ.அனந்தராமன்,** பணி நிறைவு மேலாளர், இந்தியன் ஓவர்சீஸ் வங்கி, சிவகங்கை ஸ்ரீராமகிருஷ்ணா பள்ளியின் செயலர்; சமூக சேவையில் ஈடுபட்டு பணியாற்றும் பண்பாளர்.



கல்கத்தாவிற்கு 1907-ல் சென்றார் பாரதியார். காசியில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டிற்குச் சென்றபோது மாநாடு முடிந்தவுடன் அன்பர்கள், தோழர்கள் கோரியபடி கல்கத்தா செனறோம். தமது வாழ்க்கையில் ஏற்பட்ட ஓர் அற்புதமான அனுபவம் பற்றி பாரதியார் கூறினார் :

“பிரம்ம சமாஜத்தின் தலைவர் ஆனந்தமோகன் வீட்டிற்கு சகோதரி நிவேதிதை வந்திருந்தார். எங்களிடம் மிகவும் அன்பு பாராட்டி தேசிய உணர்ச்சியும் ஆன்மீக ஒளியும் சேரப் பேசினார். சுவாமி விவேகானந்தர் தமது புத்திரியாக ஏற்றுக்கொண்டு துறவறம் பூண்டு இந்திய நாட்டின் ஆன்மீகத் தொண்டிலும், தேசபக்தியிலும் சேவை செய்தவர். என்னை அறிமுகம் செய்துகொண்டு சில பாட்டுக்களைப் பாடினேன். என்னை வீட்டிற்கு வெளியே உள்ள தோட்டத்திற்கு அழைத்துச் சென்றார். ஓர் ஆலமரம் அருகே வந்தோம். அன்னை நிவேதிதை ‘அதோ பார்! பாரத மாதா!’ என்றார். என்ன ஆச்சர்யம்! பாரத மாதாவின் சொரூபம் ஆகாயத்தை அளாவி

நிற்பதைக் கண்டேன். என் மெய் சிலிர்த்தது! நா தழுதழுத்தது. மெய்மறந்து சிலையாக நின்ற என்னை நிவேதிதா தேவியின் இனிய குரல் சுயநினைவுக்கு என்னைத் திருப்பியது. 'பார்த்தாயா பாரதமாதா உனது கவிதைத் திறமையை தேச சேவைக்கே சமர்ப்பிக்க விரும்புகிறாள். பாரதமாதாவின் வரப்பிரசாதம் உனக்குக் கிடைத்துள்ளது' என்றார் குருமணி நிவேதிதா தேவி. இந்த அருளும் அனுபூதியும் கிடைத்த பிறகுதான் என் நாவிலிருந்து தேசிய கீதங்கள், ஆன்மீகக் கவிதைகள் ஊற்று நீர் போல் வெளிவந்தன."

Swami Vivekananda's golden teaching :

The ALPHA and OMEGA is Vairagya, Renunciation. 'Give up' say Vedas. That is the one way. Neither through wealth, nor through progeny, but by giving up alone that immortality is to be reached. This is the dictate of our holy books. Renunciation, that is the flag, the banner of India, floating over the world, the one undying thought which India sends again and again as a warning to dying races, as a warning to all tyranny, as a warning to wickedness in the world.

♦♦♦



பொன்மொழிகள் - தொகுப்பாளர் : ஸ்ரீ V.**ஸ்ரீநிவாசன்,** ஸ்ரீ இராமகிருஷ்ணா பள்ளியின் முன்னாள் ஆசிரியர்; இவருடைய துணைவியார் ஸ்ரீமதி **இந்திராவும்** இப்பள்ளியின் முன்னாள் ஆசிரியர். இருவருமே ஆசிரியப் பணியை சேவையுடன் ஆற்றியுள்ளார்கள். ஸ்ரீ. **ஸ்ரீனிவாசன்** பள்ளி நிர்வாக குழுவின் உறுப்பினராகத் தொண்டாற்றுகிறார். இறைப் பற்றும் குரு பக்தியும் சேவை உள்ளமும் பெற்றவர்.

குலம் தரும் செல்வம் தந்திடும், அடியார்
படுதுயராயின வெல்லாம்
நிலம் தரும் செய்யும் நீள் விசும்பு அருளும்
அருளொடு பெருநிலம் அளிக்கும்
வலம் தரும் மற்றும் தந்திடும் பெற்ற
தாயிறும் ஆயின செய்யும்
நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்

- திருமங்கையாழ்வார்

"இந்திய மண்தான் என்னுடைய சொர்க்கம். இந்தியாவின் நலம்தான் எனது நலன். சகோதரா சொல் ! இந்தியச் சமுதாயம் என்னுடைய குழந்தைப் பருவத்தின் தொட்டில்: இளமைப் பருவத்தில் இன்பத் தோட்டம்: முதிய வயதில் வாராணாசி (காசி). ஆன்மீகத்தை மையமாகக் கொண்டு பெண் கல்வியைப் பரப்ப வேண்டும். மற்ற துறைகளில் அவர்களுக்கு அளிக்கப்படும் பயிற்சிகள் அனைத்தும் ஆன்மீகப் பயிற்சிக்கு அடுத்தபடியாகவே இருக்க வேண்டும். ஆன்மீகத்தோடு நுண்கலைகள், சுகாதாரம், முதலுதவி பண்டைய, எளிய வீடு மருத்துவப் பயிற்சி ஆகியவை பெண்களுக்குக் கற்பிக்க வேண்டும்."

- சுவாமி விவேகானந்தர்

Sri Ramakrishna Paramahamsa's Golden Sayings :

Gurudev says, "The mind is like a needle covered with mud and God is like a magnet. The needle cannot be united with the magnet unless it is free from mud.Tears wash away. The mud which is nothing but lust, anger, greed and other evil tendencies and the inclination worldly enjoyments as well. As soon as the mud is washed away the magnet attracts th needle, that is to say, man (woman) real is as God."

♦♦♦



பொன்மொழிகள் - தொகுப்பாளர் : அரிமா **ஆர்.ராதா**, உரிமையாளர், ஸ்ரீ வெங்கடேஸ்வரா ஸ்வீட்ஸ், சிவகங்கை, ஸ்ரீ ராமகிருஷ்ணா பள்ளி நிர்வாகத்தில் பங்கேற்பவர். இறைப்பணிகளில் ஈடுபாடு மற்றும் செயல்பாடு.

**மனித உறவுகள் மேம்பட அறிவுரைகள் :**

- அளவுக்கதிகமாக, தேவைக்கதிகமாய் ஆசைப்படக்கூடாது.
- தேவையான இடங்களில் நன்றியையும் பாராட்டையும் தெரிவிக்க வேண்டும்.
- பேச்சிலும் நடத்தையிலும் அடக்கத்தையும் பண்பாட்டையும் கடைப்பிடிக்க வேண்டும்.
- புன்முறுவலைக் காட்டவும், பிறரிடம் அன்பையும் மரியாதையையும் காட்டவும்.
- பிணக்குகள், அபிப்பிராய பேதங்கள் தவிர்க்க வேண்டும். தவிர்க்க முடியாதபோது பிறர் முதலில் இறங்கி வரவேண்டுமென்று காத்திருக்காமல் நீங்களே சமாதான வழியை முதலில் பின்பற்றுங்கள்.
- தற்பெருமை தவிர்க்கவும்.
- அடுத்தவர்களின் பேச்சைக் கேட்க வேண்டும்: நமது பேச்சைக் குறைக்க வேண்டும்.
- நமது பேச்சு, செயல்பாட்டில் பிடிவாதம் கூடாது: விட்டுக் கொடுக்கும் பண்பை மேற்கொள்ளுங்கள்.
- கேள்விப்படுகிற எதையும் உடனே நம்ப வேண்டாம்.
- பிறருடைய தனிப்பட்ட விஷயங்களில் தலையிடாதீர்கள்.

திருவள்ளுவர் தாம் இயற்றிய குறள்களில் 'அறன் வலியுறுத்தல்' பற்றி மட்டும் தனியாக பத்து குறள்கள் தருகிறார். பொருள் ஈட்டுதலிலும் செலவு செய்வதிலும் அறவழியைப் பின்பற்றவும், இன்பம் துய்ப்பதில் அறம் பேணுவதையும் வலியுறுத்துகிறார்.

'அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும்
செந்தன்மை பூண்டொழுகலான்.'

'ராம்' என்ற இரண்டெழுத்து மந்திரம் மிகவும் சக்தி வாய்ந்தது. அக்னி சிவஸ்வரூபம்: சூரியன் நாராயண ஸ்வரூபம்: சந்திரன் பிரம்ம ஸ்வரூபம், முக்கூடர்களின் பீஜாட்சரம் ஒன்று சேர்ந்தது ராமநாமம்.

நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
தின்மையும் பாவரும் சிதைந்து தேயுமே
சென்மமும் மரணமும் இன்றித் தீருமே
இம்மையே 'ராம' என்ற இரண்டெழுத்தினால்

**கம்பரின் கூற்று :**

பெண்களுக்கு முக்கியமான பிரச்சனைகள் பலவுண்டு. எனினும் கல்வியால் எந்தப் பிரச்சினையையும் தீர்த்து வைக்க முடியும். **- சுவாமி விவேகானந்தர்**

## SACRIFICE

Sacrifice, O Sacrifice and serve
Like clouds that cherish verdant earth
Like songful streams that flow and feed
Like smiling flowers that feast the bees
Like the lamp that burns to light a home,
Like trees that offer fruits to us,
Like SUN that save the life of the earth,
Like stars that guide the path at night,
Like a mother that loves her child
Save the world O comrade bold!

- Kaviyogi Shuddhananda Bharati

## தைத்ரிய உபநிஸத்

ஸஹநா வவது ஸஹநௌ புனக்து
ஸஹ வீர்யம் கரவாவஹை தேஜஸ்வீ நாவதீத-
மஸ்து மாவித்விஷா வஹை
ஓம் சாந்தி! சாந்தி! சாந்தி!
(இப் பிரார்த்தனையை முறையாக கற்றுக்கொள்ள முயலவும்)

## தைத்ரீய உபநிஷத்

உபநிஷதம் காட்டும் வாழ்க்கைக் கல்வியின் முதல் அம்சம் பிரார்த்தனை. உயர்ந்த எதையும் சாதிப்பதற்கு பிரார்த்தனை பூர்வமான வாழ்க்கை தேவை. இயற்கையை அணுகும்போதும் சரி. இறைவனை நாடும்போதும் சரி, பணிவுடனும் பிரார்த்தனையுடனும் முயற்சிகளை மேற்கொண்டால் பாதை சுலபமாகிறது. வாழ்க்கையை அணுகுகின்ற தைத்திரிய உபநிஷத் பிரார்த்தனையுடன் தொடங்குகிறது. **- சுவாமி விவேகானந்தர்**

நாம் ஒவ்வொருவரும் சமுதாயத்தில் ஓர் அங்கம். மிருகங்கள், செடி கொடிகள், நரிகள், மலைகள், பயிர்கள், நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் (விண்வெளி) அனைத்துமே சமுதாயத்தின் அங்கங்கள். இவை ஒவ்வொன்றையும் இறைசக்தியாகக் கண்டு இவற்றுடன் இயைந்து வாழ்ந்தால், வாழ்க்கை அதன் முழுப் பரிணாமத்துடன் திகழும். வேதங்கள், உபநிடதங்கள் மற்றும் பிரார்த்தனை இலக்கியங்கள் மூலம் யற்கையோடு நாமும் பரஸ்பரம் பேணி வாழ்ந்தால் இயற்கையும் வளமும் நாமும் வாழ்வோம். இயற்கையை அழித்தால் நாமும் அழிவோம்.

மஹாத்மா காந்திஜி இவ்வுண்மையை உணர்ந்தார். விடுதலைப் போராட்டம் மற்றும் தமது சர்வோதய திட்டங்கள் வெற்றி பெற தினமும் கூட்டுப் பிரார்த்தனை மேற்கொண்டார்.

நாம் வாழ்க்கையை சிந்தித்து வாழ வேண்டும். இதற்கு நம்மை வழிநடத்துகிறது 'தைத்ரிய உபநிஷத்'. உபநிடதங்கள் பல உள்ளன. அவற்றுள் 'தைத்ரிய உபநிஷத்' மாணவர்களுக்கு மிகவும் பயனுள்ள அறிவுரைகளை வழங்குகிறது. இந்த உபநிஷத்தில் 'சீக்ஷா வல்லி'. 'ஆனந்த வல்லி'. 'பிருகு வல்லி' என்ற மூன்று பகுதிகள் உள்ளன. சீக்ஷா வல்லி நமது வாழ்க்கையை நெறிப்படுத்தும் கல்வி பற்றியும், வாழ்க்கைப் பண்புகளையும் விளக்குகின்றது. மாணவப் பருவத்திலேயே இந்த உபநிஷத்தைக் கற்பது, குறிப்பாக சீக்ஷாவல்லியைக் கற்பது வாழ்நாள் முழுவதும் பயன் தரும்.

இயற்கை சக்திகளையும் தெய்வங்களையும் பிரார்த்தித்து இவற்றை இயக்கும் பரம்பொருள் ஆசிரியரையும் மாணவனையும் காப்பாற்றுமாறு வேண்டுதலோடு தொடங்குகிறது.

ஆனந்த வல்லியிலும், பிருகு வல்லியிலும் ஆசிரியரும் மாணவர்களும் இணைந்து மேற்கொள்ளும் உறுதிமொழி : "ஆசிரியர், மாணவர்களாகிய நம் இருவரையும இறைவன் காப்பாராக! அறிவின் ஆற்றலால் நாம் இருவரும் பயன்பெறுவோம். இருவரும் இணைந்து ஈடுபாட்டுடன் உழைப்போமாக. கற்றது நமக்குப் பயனளிக்கட்டும். நாம் இருவரும் ஒருவரையொருவர் வெறுக்காமல் இருப்போமாக. ஓம் சாந்தி! சாந்தி! சாந்தி!'

ஆர்.வேங்கடகிருஷ்ணன்
தலைவர் - தாளாளர்

இந்நூல் வெளியிடப்பெற உதவிய அன்பர்கள் அனைவருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

1. திரு. விஜயகுமார் ONGC சென்னை
2. அரிமா ஆர். ராதா சிவகங்கை
3. அரிமா டி.என். பாரதிதாசன் சிவகங்கை
4. பேராசிரியர் ஆர். பாஸ்கரன் சிவகங்கை
5. திரு. எல். தியாகராஜன் மதுரை
6. திரு. கே. குருசாமி சிவகங்கை
7. திரு. கே. ராஜவேல் சிவகங்கை
8. திரு. ஏ.ஆர்.பி. முருகேசன் மானாமதுரை
9. திரு. ஏ.கே. இராமமூர்த்தி வல்லனி
10. திரு. என். முரளி புனே
11. ஸ்ரீ ராமகிருஷ்ணா பள்ளி தலைமை ஆசிரியை திருமதி. ஆர். விஜயாள்
12. ஆசிரியை திருமதி. பி. சொர்ணவல்லி
13. ஆசிரியை திருமதி. எஸ். மீனா
14. ஆசிரியை திருமதி. கிரிஜா
15. கம்ப்யூட்டர் ஆப்பரேட்டர் செல்வி. சண்முகப்பிரியா
16. ஜே.ஆர் வழித்தோன்றர்கள்
17. சஞ்சய் கணபதி மற்றும் அச்சக பணியாளர்கள்

ஆர்.வேங்கடகிருஷ்ணன்
தலைவர் - தாளாளர்











**முன்னாள் மாணவர் தான் படித்த பள்ளியில் கொடியேற்றும் காட்சி**



**இன்பமே சூழ்க! எல்லாரும் வாழ்க!**





* Every duty is holy. Devotion to duty is the highest form of workship of God. When skill is coupled with unselfish service it becomes worship. This is Karma Yoga. Close your lips ; let your hearts open.

* Give as the Rose gives perfume because it is its own nature, utterly unconscious of giving.

*- Swami Vivekananda*

